# துடுப்பாட்டம்

கிரிக்கெட்டும் கிரிக்கெட் சார்ந்தும்

கிரிக்கெட் தமிழ் மாத இதழ்

மார்ச் - 2025




# எந்திரன்

# துடுப்பாட்டம் மாத இதழ்

# மார்ச் 2025

**இன்னிங்ஸ் 2** **ஓவர் 3**

**வடிவமைப்புக் குழு**

*S. பழனி செல்வகுமார்* *கா. இராமச்சந்திரன்*

*கார்த்திகேயன்* *ஞா. மைக்கேல்ராஜ்*

---

***வணக்கம், அன்புடையீர்!***

***முத்தரப்பு ஒருநாள் தொடர் மற்றும் சாம்பியன்ஸ் டிராபி தொடர் ஒருநாள் போட்டிகளுக்குப் புத்துயிர் அளித்துள்ளது. குறைகளைக் குறைத்து இருந்தால் இன்னும் இதன் வீச்சு அதிகமாக இருந்திருக்கும்.***

***அணியில் பலமிக்க வீரர்கள் பலர் இல்லையென்றாலும் முயற்சியில் கைவிடாது 350 ரன்களை சேஸ் செய்த ஆஸ்திரேலியா அணியிடம் நிறைய கற்றுக்கொள்ளலாம். குறிப்பாக அலெக்ஸ் கேரி பீல்டிங் மற்றும் பேட்டிங் செய்த விதம் பாராட்டுக்குரியது.***

***அதிக பொழுதுபோக்கு, அதிக ரசிக சண்டைகளின் மையம் ஐபிஎல் துவங்கவுள்ளது. சிறப்பான தகவல்கள்/ பதிவுகளுடன் துடுப்பாட்டம் உங்களை மகிழ்விக்கும்.***

---

*நன்றி :*

*படங்கள் - இணையதளம்*

*தரவுகள் -ESPNCricinfo மற்றும் ICC இணையதளம்*

தொடர்புக்கு வாட்சப் - +91 8056609320

Thuduppattam7@gmail.com

X - @thuduppattam




| உள்ளே | | |
|---|---|---|




| உள்ளே | | |
|---|---|---|

# எந்தி"ரன்"

90களின் இறுதியில் அதிக சதங்கள் அடித்த வீரராக 18 சதங்களுடன் முதலிடத்தில் இருந்தார் வெஸ்ட் இண்டீஸ் வீரர் டெஸ்மாண்ட் கெயின்ஸ். சச்சின் டெண்டுல்கர் 14வது சதத்தில் இருந்து குறுகிய காலத்தில் கெயின்ஸின் சாதனையை முறியடித்தார். சச்சினின் சாதனையை யாரும் முறியடிக்க முடியாது என்ற நிலை இருந்தது.

ஆனால் இன்று விராட் கோலி 51 சதங்கள் அடித்து முதலிடத்தில் உள்ளார். சாதனையை முறியடித்து உள்ளார் என்பதற்காக சச்சினோடு கோலியை ஒப்பிட முடியாது. ஏனென்றால் சச்சின் ஆடிய காலம், விதிமுறைகள் என்பது வேறு. விராட் கோலி எனும் ரன் குவிக்கும் எந்திரத்தை மட்டும் பார்ப்போம்.

| எதிரணி | போட்டிகள் | இன்னிங்ஸ் | மொத்த ரன்கள் | அதிக பட்சம் | சதங்கள் |
|---|---|---|---|---|---|
| ஆப்கானிஸ்தான் | 3 | 2 | 122 | 67 | 0 |
| ஆஸ்திரேலியா | 49 | 47 | 2367 | 123 | 8 |
| பங்களாதேஷ் | 17 | 17 | 932 | 136 | 5 |
| இங்கிலாந்து | 38 | 38 | 1397 | 122 | 3 |
| அயர்லாந்து | 2 | 2 | 78 | 44* | 0 |
| நேபாள் | 1 | - | - | - | - |
| நெதர்லாந்து | 2 | 2 | 63 | 51 | 0 |
| நியூஸிலாந்து | 31 | 31 | 1645 | 154* | 6 |
| பாகிஸ்தான் | 17 | 17 | 778 | 183 | 4 |
| தென் ஆப்பிரிக்கா | 31 | 29 | 1504 | 160* | 5 |
| இலங்கை | 56 | 54 | 2652 | 166* | 10 |
| எமிரேட்ஸ் | 1 | 1 | 33 | 33* | 0 |
| வெஸ்ட் இண்டீஸ் | 43 | 41 | 2261 | 157* | 9 |
| ஜிம்பாப்வே | 8 | 6 | 253 | 115 | 1 |
| | | | **14085** | | **51** |

2008ல் ஒருநாள் போட்டிகளில் அறிமுகம் ஆனார் கோலி. டெஸ்ட் போட்டிகளில் அஜந்தா மென்டிஸ் சுழலை எதிர்கொள்ள முடியாமல் திணறி இருந்தது இந்திய அணி. அந்த கடுமையான சூழலில் துவக்க வீரராகக் களமிறங்கிய அந்தத் தொடர் வெற்றி மூலம் அணியில் இடம் பிடித்தார். ராகுல் டிராவிட் விளையாடிய இடம் காலியாக, அந்த இடத்தில் தன்னைப் பொருத்திக் கொண்டார் விராட் கோலி.

14வது போட்டியில் முதல் சதமடித்தார் கோலி 4வது வீரராக களம் இறங்கி சேசிங்கில். 2011 உலகக் கோப்பை முதல் போட்டியிலும் சதமடித்தார் கோலி.

கோலி ஒரு ஆக்ரோஷமான ஆட்டக்காரர் பெரிய அளவில் சிக்ஸ் அடிக்கும் வீரர் அல்ல. ஆனால் கவர் டிரைவ், லெக் சைட் ப்லிக் மூலம் எளிதாக நான்கு ரன்களை அடிக்கும் வீரர். இன்னொரு சிறப்பு பார்ட்னர்ஷிப் கொடுப்பதில் சிறப்பான வீரர்.

299வது போட்டியில் 14000 ரன்களைக் கடந்துள்ளார் விராட் கோலி. சமீப காலத்தில் விராட் கோலியின் பலவீனம் எல்லாப் பந்து வீச்சாளர்களுக்கும் தெரிந்து இருந்தது. இந்தச் சூழலில் மெதுவான ஆடுகளத்தில் பாகிஸ்தானுக்கு எதிரான போட்டியில் தனது 51வது சதத்தை அடித்து பேட்டை உயர்த்தி அவர் சொல்வது திரும்பி வந்துட்டேன் என்று.

விராட் கோலி 23 சதங்கள் முதல் பேட்டிங்கிலும் 28 சதங்கள் சேசிங்கிலும் அடித்துள்ளார். 3வது வீரராகக் களமிறங்கி 44 சதங்களும், 4வது வீரராகக் களமிறங்கி 7 சதங்களும் அடித்துள்ளார்.

51 சதங்களில் சிறப்பான சதம் என்றால் 2012ல் ஹோபர்ட்டில் நடைபெற்ற இலங்கை எதிரான போட்டியில் இந்தியா 320 ரன்களை 40 ஓவர்களில் சேஸ் செய்தால் இறுதிப் போட்டிக்குத் தகுதி பெறும் என்ற நிலை. விராட் கோலி 86 பந்துகளில் 133 ரன்கள் எடுத்து ஆட்டமிழக்காமல் இருந்தார். இந்தியா 37வது ஓவரில் இலக்கை எட்டியது.



**ஆண்டு வாரியாக விராட் கோலி ரன் குவிப்பு:**

| 2008 | 2009 | 2010 | 2011 | 2012 | 2013 |
|---|---|---|---|---|---|
| 159 | 325 | 995 | 1381 | 1026 | 1268 |

| 2014 | 2015 | 2016 | 2017 | 2018 | 2019 |
|---|---|---|---|---|---|
| 1054 | 623 | 739 | 1460 | 1202 | 1377 |

| 2020 | 2021 | 2022 | 2023 | 2024 | 2025 |
|---|---|---|---|---|---|
| 431 | 129 | 302 | 1377 | 58 | 179 |

விராட் கோலி அதிக கேட்ச்கள் பிடித்த இந்திய வீரர் என்ற முகமது அசாருதீன் (156) சாதனையை முறியடித்துள்ளார். விராட் கோலி 158 கேட்ச்களை ஒருநாள் போட்டியில் பிடித்துள்ளார். நவீன ஒருநாள் போட்டிகளில் விராட் போன்ற வீரர்கள் எல்லைக்கோட்டுக்கு அருகே பீல்டிங் செய்தால் பந்துகளைத் தடுக்க முடியும் என்ற நிலையில் இந்த சாதனை பெரிதும் பாராட்டத்தக்கது.



திலக் வர்மா, அபிஷேக் சர்மா, ரிங்கு சிங், நித்திஷ் குமார், ருதுராஜ் கெய்க்வாட், சாய் சுதர்சன் என இளம் வீரர்கள் வாய்ப்புக்காகக் காத்திருக்கிறார்கள். ஒருநாள் போட்டிகள் குறைந்துவிட்ட தற்காலத்தில் உச்சம் தொட்டுவிட்ட விராட் கோலி தொடருவாரா காலம் தான் பதில் சொல்ல வேண்டும்.

விராட் கோலியின் கடின உழைப்பு, அர்ப்பணிப்பு, சாதனைகளுக்குத் துடுப்பாட்டம் குழுவின் சார்பாக வாழ்த்துகள்.

# சிக்ஸர் பதில்கள்

**சமீபத்தில் தென்னாப்பிரிக்க வீரர் அறிமுகப் போட்டியில் 150 ரன்கள் அடித்து உலக சாதனை படைத்தார். அறிமுகப் போட்டியில் அதிக ரன்கள் அடித்த இந்திய வீரர் யார்?**

*(மன்னர் மன்னன், மயிலாடுதுறை)*

- ✓ டெஸ்ட் போட்டிகளில் ஷிகர் தவான் - 187
  ஆஸ்திரேலியாவுக்கு எதிராக மொகாலியில் நடைபெற்ற போட்டியில் 2013
- ✓ ஒருநாள் போட்டிகளில் லோகேஷ் ராகுல் - 100*
  ஜிம்பாப்வேவுக்கு எதிராக ஹராரேவில் நடைபெற்ற போட்டியில் 2016
- ✓ சர்வதேச டி20 போட்டியில் - அஜிங்கியா ரஹானே -61
  இங்கிலாந்து எதிராக மான்செஸ்டரில் நடைபெற்ற போட்டியில் 2011




**கிரிக்கெட்டில் ஸாப்ட் சிக்னல் என்றால் என்ன?**

*(வேதநாயகம், லால்குடி)*

கிரிக்கெட்டில் பீல்டர் பிடித்த கேட்ச் சரியானதா அல்லது பிடிப்பதற்கு முன் தரையில் பட்டுள்ளதா என்பதை அறிய அம்பயர், டிவி அம்பயரிடம் செல்வதற்கு முன் அவர் பார்வையில் அவுட்டா இல்லையா என்பதைச் சொல்வதே ஸாப்ட் சிக்னல். டிவி

அம்பயருக்குக் கேமரா கோணங்கள் சரியில்லை என்றால் ஸாப்ட் சிக்னலே இறுதித் தீர்ப்பாக அமையும்.



இந்த நடைமுறையை ஐசிசி ஜூன் 1, 2023 முதல் மாற்றி விட்டது. இப்போது ஸாப்ட் சிக்னல் என்று ஒன்று கிடையாது. டிவி அம்பயரிடம் முறையிட்டால் அவர் தருவது இறுதி முடிவு.

**அயர்லாந்துக்கு எதிரான போட்டியில் பிரையன் பென்னட் 169 ரன்கள் எடுத்தார். அதுதான் ஜிம்பாப்வே வீரரின் அதிகபட்ச ரன்னா?**

*(நாகேஷ், பெங்களூரு)*

இல்லை. பிரையன் பென்னட் அடித்தது ஜிம்பாப்வே வீரராக ஒருநாள் போட்டியில் அடித்த தனி நபர் ரன்னில் 5வது இடம்.

1. முதலிடம் உலக சாதனை படைத்த (முறியடிக்கப்பட்டது ) சார்லஸ் கண்வென்ட்ரி அடித்த 194* எதிர் பங்களாதேஷ் - 2009

2. ஹாமில்டன் மாசகாட்சா - 178* எதிர் கென்யா - 2009

3. ஸான் வில்லியம்ஸ் - 174 எதிர் அமெரிக்கா - 2023 (உலகக் கோப்பைத் தகுதிச் சுற்று)

4. கிரேக் விஸ்ஸார்ட் - 172* எதிர் நமீபியா - 2003 (உலகக் கோப்பையில்)

5. பிரையன் பென்னட் - 169 எதிர் அயர்லாந்து – 2025



**சாம்பியன்ஸ் டிராபியின் சிறப்புகள் என்னென்ன?**

*(சக்திவேல், கோயம்புத்தூர்)*

1998ல் நடைபெற்ற முதல் சாம்பியன்ஸ் டிராபி நாக் அவுட் தொடர். அதில் தென்னாப்பிரிக்கா வென்றது. தென்னாப்பிரிக்கா வென்ற முதல் ஐசிசி தொடர்.

2000ல் நடைபெற்ற இரண்டாவது சாம்பியன்ஸ் டிராபி தொடரும் நாக் அவுட் தொடர் தான். அதில் வென்றது நியூசிலாந்து அணி. நியூசிலாந்து அணிக்கு அது முதல் ஐசிசி தொடர் வெற்றி.

2002ல் நடைபெற்ற சாம்பியன்ஸ் டிராபி தொடர், லீக் சுற்று, அரையிறுதி, இறுதி என நடந்தது. இந்த தொடரில் இரண்டு நாட்கள் இறுதிப் போட்டி நடந்தது. இரண்டு நாட்களுக்கு முடிவு இல்லை என்பதால் இந்தியா - இலங்கை இரு அணிகளும் வென்றாக அறிவிக்கப்பட்டது. இரு அணிகள் வென்ற முதல் ஐசிசி தொடர்.

சாம்பியன்ஸ் டிராபியை இந்தியா, ஆஸ்திரேலியா அணிகள் தலா 2 முறை வென்றுள்ளன. தென்னாப்பிரிக்கா, நியூசிலாந்து, இலங்கை, வெஸ்ட் இண்டீஸ், பாகிஸ்தான் அணிகள் தலா ஒரு முறை வென்றுள்ளன. இங்கிலாந்து அணி இதுவரை வென்றதில்லை.

# தமிழ்நாடு பிரிமியர் லீக் வீரர்கள் ஏலம்

இந்த ஆண்டுக்கான தமிழ்நாடு பிரிமியர் லீக் வீரர்கள் ஏலம் பிப்ரவரி 15ல் நடைபெற்றது. ஏலத்தை நடத்தியர் முன்னாள் கிரிக்கெட் வீரரும், பிரபல வர்ணனையாளருமான அபினவ் முகுந்த்.

**நெல்லை ராயல் கிங்ஸ்**

**அணியில் தக்கவைக்கப்பட்டவர்கள்:**

சோனு யாதவ், அருண் கார்த்திக், அஜிதேஷ், ரித்திக் ஈஸ்வரன், ஹரிஷ்

**ஏலத்தில் எடுக்கப்பட்டவர்கள்:**

| வீரர் | ஏலத்தொகை லட்சத்தில் |
|---|---|
| முகமது அட்னன் கான் | 7.05 |
| அஜய் கிருஷ்ணன் | 4.4 |
| அதிஷ் | 3.8 |
| சச்சின் ரதி | 2.5 |
| யுதீஷ்வரன் | 2.45 |
| செல்வ கணேஷ் | 2.05 |
| இம்மானுவேல் செரியன் | 0.65 |
| சந்தோஷ்குமார் | 0.6 |
| ரிஷேக் குமார் | 0.5 |
| விஜயகுமார் | 0.5 |
| அருண் பாலா யோகி | 0.5 |
| நிர்மல் குமார் | 0.5 |
| ரோகன் | 0.5 |
| கரண் ஹமிர் சம்பத் | 0.5 |
| ராக்கி | 0.5 |



**சீசம் மதுரை பேந்தர்ஸ்**

**அணியில் தக்கவைக்கப்பட்டவர்கள்:**

முருகன் அஸ்வின், குர்ஜப்நீட் சிங், சரவணன், சதுர்வேத்

**ஏலத்தில் எடுக்கப்பட்டவர்கள்:**

| வீரர் | ஏலத்தொகை லட்சத்தில் |
|---|---|
| கார்த்திக் மெய்யப்பன் | 9.2 |
| ராம் அரவிந்த் | 8.1 |
| கணேஷ் | 8.05 |
| அதீக் உர் ரஹ்மான் | 7.75 |
| அனிருத் சீதாராம் | 6.2 |
| தீபேஷ் | 5.15 |
| கௌதம் தாமரை கண்ணன் | 5.15 |
| விக்னேஷ் | 2.65 |
| ஷ்யாம் சுந்தர் | 2.65 |
| சரத்குமார் | 2.5 |
| அஜய் சேட்டன் | 0.85 |
| ராஜலிங்கம் | 0.65 |
| சூர்யா ஆனந்த் | 0.65 |
| சங்கர் கணேஷ் | 0.5 |
| சஞ்சீவ் குமார் | 0.5 |
| ஆயுஷ் | 0.5 |



**லைகா கோவை கிங்ஸ்**

**அணியில் தக்கவைக்கப்பட்டவர்கள்:**

ஷாருக்கான், சாய் சுதர்சன், சித்தார்த், சச்சின், ஜதவேத் சுப்பிரமணியன்

**ஏலத்தில் எடுக்கப்பட்டவர்கள்:**

| வீரர் | ஏலத்தொகை லட்சத்தில் |
|---|---|
| லோகேஷ்வர் | 10.0 |
| ஆன்ட்ரே சித்தார்த் | 8.4 |
| அம்ப்ரிஷ் | 6.25 |
| புவனேஸ்வரன் | 3.05 |
| ரோகித் | 1.6 |
| விஷால் வைத்யா | 1.0 |
| மாதவ பிரசாத் | 0.65 |
| கோவிந்த் | 0.6 |
| பிரதீப் விஷால் | 0.5 |
| ஜித்தேந்திர குமார் | 0.5 |
| திவாகர் | 0.5 |
| வித்யூத் | 0.5 |
| கபிலன் | 0.5 |
| ஆதித்யா | 0.5 |
| குரு ராகவேந்திரன் | 0.5 |



**<u>எஸ்கேஎம் சேலம் ஸ்பார்டன்ஸ்</u>**

**<u>அணியில் தக்கவைக்கப்பட்டவர்கள்:</u>**

அபிஷேக், ஹரிஷ் குமார், பொய்யாமொழி, சன்னி சந்து, விவேக்

**<u>ஏலத்தில் எடுக்கப்பட்டவர்கள்:</u>**

| வீரர் | ஏலத்தொகை லட்சத்தில் |
|---|---|
| முகமது | 18.4 |
| ஹரி நிஷாந்த் | 12.0 |
| நிதிஷ் ராஜகோபால் | 10.0 |
| பூபதி வைஷ்ணகுமார் | 6.8 |
| அஜித் ராம் | 5.0 |
| ஈஸ்வர் | 4.0 |
| கவின் | 2.2 |
| ரஹில் சஞ்சய் ஷா | 2.0 |
| கார்த்திக் மணிகண்டன் | 0.75 |
| யாழ் அருண் மொழி | 0.5 |
| கௌரி சங்கர் | 0.5 |
| ஹிமாலயா | 0.5 |
| ராகுல் | 0.5 |
| பவித்ரன் | 0.5 |



**<u>சேப்பாக் சூப்பர் கில்லீஸ்</u>**

**<u>அணியில் தக்கவைக்கப்பட்டவர்கள்:</u>**

அபிஷேக் தன்வார், அபரஜித், ஜெகதீசன், லோகேஷ் ராஜ், சிலம்பரசன்

**<u>ஏலத்தில் எடுக்கப்பட்டவர்கள்:</u>**

| வீரர் | ஏலத்தொகை லட்சத்தில் |
|---|---|
| விஜய் சங்கர் | 18.0 |
| சுவப்னில் சிங் | 10.8 |
| ரோகித் சுதர் | 7.95 |
| மோகித் ஹரிஹரன் | 5.2 |
| அக்ரம் கான் | 1.1 |
| ஆஷிக் | 0.65 |
| ப்ரேம் குமார் | 0.6 |
| ராஜலிங்கம் | 0.5 |
| தினேஷ் ராஜ் | 0.5 |
| கிருபாகர் | 0.5 |
| ஆஷிக் ஸ்ரீனிவாஸ் | 0.5 |
| ராஜன் | 0.5 |
| சச்சின் | 0.5 |
| அர்ஜுன் மூர்த்தி | 0.5 |
| சுனில் கிருஷ்ணா | 0.5 |



**திருச்சி கிராண்ட் சோழாஸ்**

**அணியில் தக்கவைக்கப்பட்டவர்கள்:**

சஞ்சய் யாதவ், ராஜ்குமார், அதிசயராஜ் டேவிட்சன், ஜாபர் ஜமால், வசீம் அகமது

**ஏலத்தில் எடுக்கப்பட்டவர்கள்:**

| வீரர் | ஏலத்தொகை லட்சத்தில் |
|---|---|
| முகிலேஷ் | 17.6 |
| சுரேஷ்குமார் | 16.1 |
| சரவணகுமார் | 8.4 |
| கௌஷிக் | 8.0 |
| வாசிங்டன் சுந்தர் | 6.0 |
| சுஜாய் | 3.0 |
| ஈஸ்வரன் | 1.2 |
| கணேஷ் மூர்த்தி | 1.0 |
| ஆண்டனி தாஸ் | 1.0 |
| ரெயின் | 0.5 |
| வினோத் | 0.5 |
| ஆர்யா மோகன் | 0.5 |
| செல்வ குமரன் | 0.5 |



**திண்டுக்கல் டிராகன்ஸ்**

**அணியில் தக்கவைக்கப்பட்டவர்கள்:**

அஸ்வின், வருண் சக்ரவர்த்தி, சந்தீப் வாரியர், இந்திரஜித், ஷிவம் சிங்

**ஏலத்தில் எடுக்கப்பட்டவர்கள்:**




| வீரர் | ஏலத்தொகை லட்சத்தில் |
| --- | --- |
| ஹன்னி | 11.7 |
| பெரியசாமி | 9.8 |
| மான் பாஃப்னா | 5.7 |
| விமல் குமார் | 3.8 |
| ஜெயந்த் | 1.15 |
| சந்திரசேகர் | 0.85 |
| ராஜ்விந்தர் சிங் | 0.5 |
| அதுல் மாருதி விட்கர் | 0.5 |
| கார்த்திக் சரண் | 0.5 |
| விஜூ அருள் | 0.5 |
| தினேஷ் | 0.5 |

**ஐட்ரீம் திருப்பூர் தமிழன்ஸ்**

**அணியில் தக்கவைக்கப்பட்டவர்கள்:**

சாய் கிஷோர், நடராஜன், துஷார் ரகேஜா, முகமது அலி, அமித் சாத்விக்

**ஏலத்தில் எடுக்கப்பட்டவர்கள்:**

| வீரர் | ஏலத்தொகை லட்சத்தில் |
|---|---|
| சிலம்பரசன் | 9.0 |
| பிரதோஷ் ரஞ்சன் பால் | 4.4 |
| சசி தேவ் | 3.7 |
| பிரன்வ் ராகவேந்திரா | 2.75 |
| ராதாகிருஷ்ணன் | 1.0 |
| மோகன் பிரசாத் | 1.0 |
| டேரில் பெராரியோ | 0.85 |
| சூர்யா | 0.85 |
| அச்யூத் | 0.75 |
| மதிவாணன் | 0.7 |
| இசக்கி முத்து | 0.6 |
| ராஜ்குமார் | 0.55 |
| பிரபஞ்சன் | 0.5 |
| அனோவங்கர் | 0.5 |
| கனிபாலன் | 0.5 |



# நானும் கிரிக்கெட்டும்

மைக்கேல்ராஜ்

இது பதினொன்றாவது மற்றும் பன்னிரண்டாவது வகுப்பு படிக்கும்போது நடந்த சம்பவங்களின் தொகுப்பு. பதினொன்னாவது படிக்க தினசரி ஊருல இருந்து பஸ்ல வரப் பணம் இல்லாததால அரசோட இலவச விடுதியில் தங்கிப் படிக்க முடிவு செஞ்சு விண்ணப்பம் போட்டு ஒருவழியா ஹாஸ்டல்ல சேர்ந்தாச்சு. மாசத்துல ஒருநாள் மட்டும் ஊருக்குப் போயிட்டு வருவேன் இங்க இருந்து. இங்க நல்ல ஒரு நட்பு வட்டாரம் உருவாச்சு. படிப்பு நல்லா வந்ததால கூட இருந்த பசங்களும் நல்லா பழகி சேர்ந்து படிக்குறதுனு ஒரு வட்டம் அமைஞ்சது.

ஊருக்குப் போகாத வார இறுதி நாட்கள்ல சாயந்திரம் ஆனா கிரிக்கெட் தான். ஹாஸ்டலுக்குப் பின்னாடி இருந்த பெரிய பொட்டல் காடு  தான் நாங்க கிரிக்கெட் விளையாடுற இடம். அப்போவே பிளாட் போடுற சமாச்சாரங்கள் ஆரம்பிச்சதால அங்கங்க கல்லுகள நட்டி வச்சிருப்பாங்க. பாத்து தான் பீல்டிங் பண்ணனும். காலு பெருவிரலை குத்திக் கிழிச்சு சம்பவம்லாம் நடந்திருக்கு. பசங்க அப்போவும் விளையாடுறத நிறுத்தினது இல்ல.



இந்த விடுதி வார்டன் ஒரு நல்ல மனிதர். தங்குறதுக்கு விண்ணப்பம் போடுறதுக்கு முன்னாடி அவர்கிட்ட மொதல்ல பேசிட்டு பண்ணுவோம்னு முடிவு பண்ணி சொன்னப்போ அப்ளை பண்ணு பாக்கலாம்னு சொல்லிட்டார். நானும் அப்பிளிக்கேஷன் எடுத்துக்கிட்டு ஸ்கூல் அப்போதைய ரேங்க் கார்ட் எடுத்துக்கிட்டு போனேன். இறுதித் தேர்வுக்கு முன்னாடி இடைத்தேர்வு முடிஞ்ச சமயம் அது. அந்தத் தேர்வுல 930 மதிப்பெண்கள் எடுத்ததப் பார்த்துட்டு சூப்பர்டா, சேத்துக்கறேன்னு மொதல்ல சொன்னவர் பாடவாரியாக மதிப்பெண் பாத்துட்டு என்னடா கணக்குல முட்டை வாங்கிருக்கே உனக்கு இடம் கிடையாதுன்னு சொல்லிட்டார். அப்புறம் தேர்வு

எழுதுறப்போ நண்பனுக்குக் காட்டப் போயி மாட்டிக்கிட்டதால முட்டை மார்க் போட்டுட்டாங்கனு எடுத்துச் சொன்னப்போ சேத்துக்கிட்டார்.

தன்னோட பொண்ணு மஞ்சள் நீராட்டு விழாவுக்கு ஹாஸ்டல்ல இருந்த அத்தனை (50 பேர் இருந்திருப்போம்னு நினைக்கேன்) பேரையும் கூப்பிட்டு நல்லா கவனிச்சு அனுப்புன மனுஷன். பனிரெண்டாவது வகுப்பு முடிச்சிட்டு வெளில வந்தப்போ ரொம்பக் கஷ்டமா இருந்துச்சு அந்த ஹாஸ்டலை விட்டு வர்றதுக்கு. கிரிக்கெட்ட விட்டுட்டு எங்கேயோ போயிட்டேனோ? வாங்க அங்க போவோம்.

அப்படியாப்பட்ட வார இறுதி நாட்கள்ல விளையாண்ட ஒரு மேட்ச். நான் இருந்த டீம் பவுலிங் போட்டு முடிச்சு அப்போ பேட்டிங் ஆடிட்டுருந்தோம். எட்டு ஓவருக்கு அம்பது ரன்கள் போல எங்களுக்கு டார்கெட்னு நினைக்கேன். ரப்பர் பால் மேட்ச் தான். ஆனாலும் நமக்கு பேட்டிங் செட் ஆகாது. அதுவும் அடிச்சி ஆடுறதெல்லாம் சுத்தமா வராது. மாரிமுத்து நல்லா பவுலிங் போடுவான் அதுக்கு மேல நல்லா பேட்டிங் ஆடுவான். அவன் ரெண்டாவது ஓவர்ல இறங்கி ஆறாவது ஓவர்ல மேட்ச் முடியிற அளவுக்குக் கொண்டு போயிட்டான். ஆறு ஓவர் முடிஞ்சப்போ 5 ரன்கள் அடிக்கனும் வின் பண்ணுறதுக்கு. மாரிமுத்து கூட ஆடிக்கிட்டுருந்த பையன் அவுட்டு. அடுத்து வந்தவனும் அவுட்டு.

இப்போ நான் மட்டும் தான் இருக்கேன் கடைசி விக்கெட்டா. மாரிமுத்து வந்தான், எப்படியாவது ஒரு சிங்கிள் அடிச்சிட்டு இந்தப் பக்கம் வந்துடுடா நான் பாத்துக்கறேன்னு சொன்னான். நான் முடிஞ்சா பாக்குறேன்னு சொன்னதும் மொறச்சான். அப்படி முடியலைன்னா அவுட் ஆகாம இந்த நாலு பாலும் முடிச்சி விட்டுடு நான் கடைசி ஓவர்ல பாத்துக்கறேன்னு சொன்னான். இது என்னால முடியும் நான் பாத்துக்கறேன்னு சொல்லிட்டேன். அடுத்த ரெண்டு பாலும் அந்த பவுலர் ஸ்டெம்புக்கு வெளில போட்டான், நானும் ரொம்ப நன்றிப்பானு தொடக்கூட இல்ல. அஞ்சாவது பந்த காலுக்குள்ள வந்து நேரா இறக்குனான் (Toe crushing yorker னு சொல்லுவாங்களே). மாரிமுத்து நினைச்சிருப்பான் அவ்ளோ தான் முடிஞ்சதுனு. ஆனா அத அப்படி ஒரு பிளாக் பண்ணுனேன் பாருங்க செம்ம விசிலு (அகார்கர் டெஸ்ட்ல தொடர்ந்து ஆறு டக்கவுட் ஆகிட்டு ஏழாவது மேட்சில் ஒரு ரன்னு அடிச்சதும் பேட்ட தூக்கிக் காட்டுன மாதிரி அப்படி ஒரு மொமண்ட்). இப்போ கடைசிப் பந்து அந்த பவுலர்கிட்ட இருந்து ஓவர் பிட்சா வந்தது. மூடிக்கிட்டு அத ஸ்ட்ரோக் வச்சிருந்திருக்கலாம். ஆனா தூக்கி அடிக்கிறேன்னு பேட்டத் தூக்கி சுத்தப் போக ஸ்டெம்பு பறந்துருச்சு.

அதுக்கப்புறம் ரெண்டு நாளைக்கு மாரிமுத்து கண்ணுல படாம ஸ்கூல் போயிட்டு வந்துட்டுருந்தேன். லாஸ்ட் ஓவர்ல நாலு ரன்ன எடுக்கவிடாம தடுக்கணுமா, என்னயக் கூப்பிடுவாங்க பவுலிங் போட. ஆனா பேட்டிங்கில் ஒரு ரன் எடுக்க வேண்டியது இருந்தாலும் என்னயக் கூப்பிட மாட்டாங்க அதுக்கப்புறத்துல இருந்து.

# இலங்கை - ஆஸ்திரேலியா

**டெஸ்ட் தொடர்**

ஆஸ்திரேலிய கிரிக்கெட் அணி இலங்கைக்கு சுற்றுப்பயணம் மேற்கொண்டு இரண்டு டெஸ்ட் போட்டிகளில் ஆடியது. உலக டெஸ்ட் சாம்பியன்ஷிப் இறுதிப் போட்டி அணிகள் ஏற்கனவே தேர்வானதால் இந்தப் போட்டிகள் அதிக முக்கியத்துவம் பெறவில்லை.

ஆஸ்திரேலிய கேப்டன் பாட் கம்மின்ஸ் ஓய்வு எடுத்துக்கொள்ள ஸ்டீவ் ஸ்மித் கேப்டனாக செயல்பட்டார். முதல் டெஸ்ட் ஜனவரி 29-ம் தேதி காலி மைதானத்தில் தொடங்கியது. ஆஸ்திரேலியா டாஸ் வென்று பேட்டிங் செய்து முதல் நாளில் 330 ரன்கள் குவித்தது. இரண்டாம் நாளில் தேனீர் இடைவேளைக்குப் பிறகு 6 விக்கெட் இழப்பிற்கு 654 ரன்கள் எடுத்து டிக்ளேர் செய்தது.

துவக்க வீரர் உஸ்மான் கவாஜா (232) இரட்டை சதமடித்தார். கேப்டன் ஸ்மித் (141), இங்க்லிஷ் (102) சதமடித்தனர். டிராவிஸ் ஹெட் தனது பங்கிற்கு 57 ரன்கள் எடுத்தார். இலங்கை சுழற்பந்து வீச்சாளர்கள் பிரபாத் ஜெயசூர்யா, வாண்டர்சே தலா 3 விக்கெட்டுகளை வீழ்த்தினர்.




இரண்டாம் நாள் முடிவில் இலங்கை 44 ரன்களுக்கு 3 விக்கெட்டுகளை இழந்தது. மூன்றாம் நாளில் பெரிய அளவில் மழையே விளையாடியது , இலங்கை 136/5.

நான்காம் நாளில் இலங்கை வேகமாக வீழ்ந்தது. சுழற்பந்தை வைத்தே சாய்த்தது ஆஸ்திரேலியா. இலங்கை 165 ரன்களுக்கு ஆல் அவுட் ஆனது. அதிக பட்சமாக சண்டிமால் 72 ரன்கள் எடுத்தார். குன்னிமேன் 5 விக்கெட்டுகளையும் நாதன் லைன் 3 விக்கெட்டுகளையும் வீழ்த்தினர்.

இலங்கை பாலோ ஆன் ஆகி மீண்டும் பேட்டிங் செய்தது. மீண்டும் ஆல் அவுட் ஆனது. வாண்டர்சே 53 ரன்கள் அடித்தார். குங்னிமேன், லைன் தலா 4 விக்கெட்டுகளை வீழ்த்தினர். ஆஸ்திரேலியா இன்னிங்ஸ் மற்றும் 242 ரன்கள் வித்தியாசத்தில் வென்றது.

இரண்டாவது டெஸ்ட் காலி மைதானத்தில் பிப்ரவரி 6-ல் தொடங்கியது. இலங்கை முதலில் பேட்டிங் செய்து 127 ரன்களுக்கு 5 விக்கெட்டுகளை இழந்தது. குஷால் மென்டிஸ் போராட்டத்தால் 257 ரன்களுக்கு ஆல் அவுட் ஆனது. குஷால் மென்டிஸ் 85 ரன்கள் அடித்து ஆட்டமிழக்காமல் இருந்தார். சண்டிமால் 74 ரன்கள் அடித்தார்.




ஸ்டார்க், குங்னிமேன், லைன் தலா 3 விக்கெட்டுகளை வீழ்த்தினர். ஆஸ்திரேலியா அலெக்ஸ் கேரி (156) மற்றும் ஸ்டீவ் ஸ்மித் (131) சதங்களால் 414 ரன்கள் எடுத்தது. இலங்கை தரப்பில் பிரபாத் ஜெயசூர்யா 5 விக்கெட்டுகளை வீழ்த்தினார். நிஸான் பெர்ரிஸ் 3 விக்கெட்டுகளையும் ரமேஷ் மெண்டிஸ் 2 விக்கெட்டுகளையும் வீழ்த்தினர்.

இரண்டாவது இன்னிங்ஸிலும் இலங்கை சொதப்பலான பேட்டிங் செய்தது. பாத்ரூம் (76) குஷால் மென்டிஸ் (50) அரை சதங்களால் 231 ரன்கள் எடுத்தது.

குங்னிமேன், லைன் தலா 4 விக்கெட்டுகளையும் பியூ வெப்ஸ்டர் இரண்டு விக்கெட்டுகளையும் வீழ்த்தினர். 75 ரன்கள் என்ற சிறிய இலக்கை ஆஸ்திரேலியா ஒரு விக்கெட்டை மட்டுமே இழந்து எட்டியது. அலெக்ஸ் கேரி ஆட்டநாயகன் ஆனார்.

**ஒருநாள் தொடர்**

ஆஸ்திரேலிய அணி இலங்கைத் தொடரில் ஒரு ஒருநாள் போட்டியை சேர்க்க சொன்னது. சாம்பியன்ஸ் டிராபி ஆசியாவில் நடைபெறுவதால் பயிற்சிக்காக. பிறகு இரண்டு ஒருநாள் போட்டிகளாக மாற்றப்பட்டது.

முதல் ஒருநாள் போட்டி பிப்ரவரி 12ம் தேதி கொழும்பில் நடைபெற்றது. ஆஸ்திரேலிய அணியில் ஹெட், மேக்ஸ்வெல் களம் இறங்கவில்லை. ஆஸ்திரேலிய அணி சிறப்பாகப் பந்து வீசியது. இலங்கை அணி 135 ரன்களுக்கு 8 விக்கெட்டுகளை இழந்தது. கேப்டன் அசலங்க அதிரடியாக ஆட, வெல்லலாகே அவருக்குத் துணை நின்றார். இலங்கை 214 ரன்கள் அடித்தது. அசலங்க (127) சதமடித்தார்.



ஆஸ்திரேலியா தரப்பில் அப்பாட் 3 விக்கெட்டுகளையும் ஸ்பென்சர் ஜான்சன், ஹார்டி, எல்லிஸ் தலா 2 விக்கெட்டுகளையும் வீழ்த்தினர்.

சிறிய இலக்கு என்றாலும் இலங்கை ஆஸ்திரேலியாவை நெருங்க விடவில்லை. அலெக்ஸ் கேரி மட்டும் 41 ரன்கள் அடிக்க ஆஸ்திரேலியா 165 ரன்களுக்கு ஆல் அவுட் ஆனது. இலங்கை 49 ரன்கள் வித்தியாசத்தில் வென்றது.

இலங்கை தரப்பில் தீக்சானா 4 விக்கெட்டுகளையும் வெல்லலாகே, அஸிதா பெர்ணான்டோ தலா 2 விக்கெட்டுகளையும் வீழ்த்தினர். பிப்ரவரி 14-ம் தேதி இரண்டாவது ஒருநாள் போட்டி நடந்தது. இலங்கை சிறப்பாக பேட்டிங் செய்தது. குஷால் மென்டிஸ் (101) சதமடித்தார். நிஷான் மதுஸ்கா (51) , கேப்டன் அசலங்க (78*) அரைசதம் அடித்தனர். இலங்கை 4 விக்கெட் இழப்பிற்கு 281 ரன்கள் அடித்தது.




ஆஸ்திரேலிய அணியில் ஹெட், மேக்ஸ்வெல் விளையாடினர். இங்க்லிஷ் விக்கெட் கீப்பராக ஆடினார். ஆனாலும் இலக்கை நெருங்க முடியவில்லை. தீக்சானா விக்கெட் எதுவும் எடுக்கவில்லை. ஆனால் வெல்லலாகே நான்கு விக்கெட்டுகளை வீழ்த்தினார். அஸிதா பெர்ணான்டோ மற்றும் ஹசரங்க தலா 3 விக்கெட்டுகளை வீழ்த்தினர்.

ஆஸ்திரேலிய அணியில் கேப்டன் ஸ்மித் 29 ரன்களும், ஹெட் 18 ரன்களும் அடித்தனர். ஆஸ்திரேலியா 107 ரன்களுக்கு ஆல் அவுட் ஆனதால் இலங்கை 174 ரன்கள் வித்தியாசத்தில் வென்றது.

# சாதனைத் துளிகள்

## ஒருநாள் போட்டி - ஒரு இன்னிங்ஸில் அதிக ரன்கள் குவித்தவர்கள் (பேட்டிங் பொசிசன் அடிப்படையில்)

| வரிசை எண் | வீரர் | அணி | ரன்கள் | எதிரணி | மைதானம் | ஆண்டு |
|---|---|---|---|---|---|---|
| 1 | மார்டின் கப்தில | நியூஸிலாந்து | 237* | வெஸ்ட் இண்டீஸ் | வெலிங்டன் | 2015 |
| 2 | ரோகித் சர்மா | இந்தியா | 264 | இலங்கை | கொல்கத்தா | 2014 |
| 3 | சார்லஸ் கண்வென்ட்ரி | ஜிம்பாப்வே | 194* | பங்களாதேஷ் | புலவாயோ | 2009 |
| 4 | விவியன் ரிச்சர்ட்ஸ் | வெஸ்ட் இண்டீஸ் | 189* | இங்கிலாந்து | மான்செஸ்டர் | 1984 |
| 5 | கென்ரிச் கிளாஸ்ஸன் | தென் ஆப்பிரிக்கா | 174 | ஆஸ்திரேலியா | செஞ்சூரியன் | 2023 |
| 6 | க்ளென் மேக்ஸ்வெல | ஆஸ்திரேலியா | 201* | ஆப்கானிஸ்தான் | மும்பை | 2023 |
| 7 | லூக் ரோஞ்சி | நியூஸிலாந்து | 170* | இலங்கை | டுனிடின் | 2015 |
| 8 | சிமி சிங் | அயர்லாந்து | 100* | தென் ஆப்பிரிக்கா | மாலகைட் | 2021 |
| | மெகதி ஹசன் மிராஸ் | பங்களாதேஷ் | 100* | இந்தியா | மிர்பூர் | 2022 |
| 9 | ஆன்ட்ரே ரஸல் | வெஸ்ட் இண்டீஸ் | 92* | இந்தியா | நார்த் சவுண்ட் | 2011 |
| 10 | ரவி ராம்பால் | வெஸ்ட் இண்டீஸ் | 86* | இந்தியா | விசாகப்பட்டினம் | 2011 |
| 11 | முகமது அமீர் | பாகிஸ்தான் | 58 | இங்கிலாந்து | நாட்டிங்கம் | 2011 |

# தேசிய சக்கர நாற்காலி கிரிக்கெட் சாம்பியன்ஷிப்

மாற்றுத் திறனாளிகள் கிரிக்கெட் வாரியம் சார்பாக தேசிய சக்கர நாற்காலி கிரிக்கெட் சாம்பியன்ஷிப் 2025, மத்தியப் பிரதேசம் மாநிலம் குவாலியரில் நடந்தது. தொலைக்காட்சி மற்றும் ஊடகங்களில் அதிகம் கவனம் பெறாத இந்தத் தொடர் பற்றி எழுதுவதில் துடுப்பாட்டம் பெருமிதம் கொள்கிறது.

கிரிக்கெட்டின் சிறப்பே அதை எப்படி வேண்டுமானாலும் யார் வேண்டுமானாலும் விளையாடலாம் என்பது தானே. சக்கர நாற்காலி கிரிக்கெட் என்ன விதி விலக்கா?




18 அணிகள் பங்கேற்ற இந்தத் தொடர் பிப்ரவரி 5 முதல் 15 வரை நடைபெற்றது.

**அரை இறுதி 1 - பிப்ரவரி 14**

**சண்டிகர் - 199/6**

**தமிழ்நாடு - 164/7**

***சண்டிகர் அணி 35 ரன்கள் வித்தியாசத்தில் வெற்றி***

ஆட்டநாயகன் சந்தீப் குண்டு - 64 & 1 விக்கெட்

**அரை இறுதி 2 - பிப்ரவரி 14**

**கர்நாடகா - 222/5**

**டெல்லி - 95**

***கர்நாடகா 127 ரன்கள் வித்தியாசத்தில் வெற்றி***

ஆட்டநாயகன் சாகர் கௌடா - 48 & 2 விக்கெட்

**<u>இறுதிப் போட்டி - பிப்ரவரி 15</u>**

*கர்நாடகா - 201/6*

ஹரீஷ் குமார் - 67 (28)

ஷிவ் பிரசாத் 55 (35)

*சண்டிகர் - 202/3*

சந்தீப் குண்டு - 116* (53)

***சண்டிகர் 7 விக்கெட் வித்தியாசத்தில் வெற்றி***

ஆட்டநாயகன் சந்தீப் குண்டு - 116*



# முத்தரப்புப் போட்டி

- கா. ராமச்சந்திரன்

90களில் சர்வதேச கிரிக்கெட் ரசிகர்களால் அதிகம் பேசப்பட்ட, கேட்கப்பட்ட சொற்றொடர் தான் இந்த முத்தரப்புப் போட்டிகள், சமீபமாக அதிகம் நடைபெறுவதில்லை. பாகிஸ்தானில் நடைபெறும் சாம்பியன்ஸ் கோப்பைப் போட்டிகளுக்குத் தங்களைத் தயார் செய்யும் விதமாக பாகிஸ்தான்- தென்னாப்பிரிக்கா - நியூசிலாந்து இடையே லாகூர் மற்றும் கராச்சியில் இந்த முத்தரப்புத் தொடர் திட்டமிடப்பட்டிருந்தது (மொத்தம் 4 போட்டிகள்).

**முதல் போட்டி-**

லாகூரில் நடைபெற்ற முதல் போட்டியில் நியூசிலாந்து அணி பாகிஸ்தானை 78 ரன்கள் வித்தியாசத்தில் வீழ்த்தியது.




| **நியூசிலாந்து - 330/6 (50 ஓவர்கள் )** | **பாகிஸ்தான் - 252/10 (47.5 ஓவர்கள்)** |
| --- | --- |
| கிளென் பிலிப்ஸ் - 106* (74) | ஃபகர் சல்மான் – 84 (69) |
| ஷகீன் அப்ரிடி - 3/88 (10 ஓவர்கள்) | மிச்செல் சான்ட்னர் - 3/41 (10 ஓவர்கள்) |
| ஆட்டநாயகன் | கிளென் பிலிப்ஸ் - 106* (74) & 1/18 (3 ஓவர்கள் ) |

**இரண்டாவது போட்டி:**

லாகூரில் நடைபெற்ற இரண்டாவது போட்டியில் நியூசிலாந்து அணி தென்னாப்பிரிக்க அணியை 6 விக்கெட் வித்தியாசத்தில் வீழ்த்தியது.இந்தப் போட்டியில் அறிமுக வீரராகக் களமிறங்கிய தென்னாப்பிரிக்காவின் ப்ரீட்ஷ்கி 150 ரன்கள் குவித்து சாதனை படைத்தார்.




| **தென்னாப்பிரிக்கா - 304/6 (50 ஓவர்கள் )** | **நியூசிலாந்து - 308/4 (48.4 ஓவர்கள்)** |
|---|---|
| ப்ரீட்ஷ்கி- 150 (148) | வில்லியம்சன் - 133* (113) |
| மேட் ஹென்றி - 2/59 (10 ஓவர்கள்) | செனுரன் முத்துசாமி - 2/50 (8.4ஓவர்கள்) |
| ஆட்டநாயகன் | வில்லியம்சன் - 133* (113) |

**மூன்றாவது போட்டி** ;

கராச்சியில் நடைபெற்ற இந்தப் போட்டியில் பாகிஸ்தான் தென்னாப்பிரிக்காவை 6 விக்கெட் வித்தியாசத்தில் வீழ்த்தி இறுதிப்போட்டிக்குத் தகுதி பெற்றது.




| **தென்னாப்பிரிக்கா- 352/5 (50 ஓவர்கள் )** | **பாகிஸ்தான் - 355/4 (49 ஓவர்கள்)** |
|---|---|
| கிளாசன் – 87 (56) | சல்மான் ஆஹா - 134* (103) |
| ஷகீன் அப்ரிடி - 2/66 (10 ஓவர்கள்) | வியான் முல்டர்  - 2/79 (10 ஓவர்கள்) |
| ஆட்டநாயகன் | சல்மான் ஆஹா - 134*(103) |

**இறுதிப்போட்டி**:

கராச்சியில் நடைபெற்ற இறுதிப்போட்டியில் பாகிஸ்தானை 5 விக்கெட் வித்தியாசத்தில் வீழ்த்தி முத்தரப்புப் போட்டிகள் கோப்பையை **நியூசிலாந்து** வென்றது.




| **பாகிஸ்தான் - 242/10 (49.3 ஓவர்கள் )** | **நியூசிலாந்து - 243/5 (45.2 ஓவர்கள்)** |
|---|---|
| ரிஸ்வான் – 46 (76) | டேரி மிச்செல் – 57 (58) |
| வில்லியம் ஒரூக்கி - 4/43 (9.3 ஓவர்கள்) | நசிம் ஷா - 2/43 (8 ஓவர்கள்) |
| ஆட்டநாயகன் | வில்லியம் ஒரூக்கி - 4/43 (9.3 ஓவர்கள் |
| **தொடர் நாயகன்** | **சல்மான் ஆஹா - 219 ரன்கள் & 1 விக்கெட்** |

# ஒன்டே தி கிரேட்

ஐசிசி
தர வரிசை



| அணிகள் | | |
|---|---|---|
| 1 | இந்தியா | 120 |
| 2 | ஆஸ்திரேலியா | 110 |
| 3 | பாகிஸ்தான் | 106 |
| 4 | நியூஸிலாந்து | 106 |
| 5 | தென் ஆப்பிரிக்கா | 101 |
| 6 | இலங்கை | 99 |
| 7 | இங்கிலாந்து | 89 |
| 8 | ஆப்கானிஸ்தான் | 87 |
| 9 | பங்களாதேஷ் | 80 |
| 10 | வெஸ்ட் இண்டீஸ் | 78 |

| பந்து வீச்சாளர் | | |
|---|---|---|
| மகீஷ் தீக்ஷானா | இலங் | 680 |
| ரஷீத்கான் | ஆப்கா | 658 |
| குல்தீப் யாதவ் | இந்தி | 656 |
| கேசவ் மகராஜ் | தெ ஆ | 641 |
| பெர்னார்ட் ஸ்கால்ட்ஷ் | நமி | 641 |
| மாட் ஹென்றி | நியூஸி | 635 |
| மிட்செல் சாண்ட்னர் | நியூஸி | 632 |
| குடகேஸ் மோட்டி | வெ இ | 632 |
| ஷாகின் அப்ரிடி | பாக் | 619 |
| ஆடம் ஸாம்பா | ஆஸி | 616 |






| பேட்ஸ்மேன் | | | |
|---|---|---|---|
| 1 | சுப்மன் ஹில் | இந்தி | 817 |
| 2 | பாபர் அசாம் | பாக் | 770 |
| 3 | ரோகித் சர்மா | இந்தி | 757 |
| 4 | ஹென்றிச் கிளாஸ்ஸன் | தெ ஆ | 749 |
| 5 | விராத் கோலி | இந்தி | 743 |
| 6 | டேரில் மிட்செல் | நியூஸி | 717 |
| 7 | ஹாரி டெக்டார் | அயர் | 713 |
| 8 | சரித் அசலங்க | இலங் | 694 |
| 9 | ஷ்ரேயாஸ் ஐயர் | இந்தி | 679 |
| 10 | சாய் ஹோப் | வெ இ | 672 |

| ஆல் ரவுண்டர் | | |
|---|---|---|
| முகமது நபி | ஆப்கா | 296 |
| சிக்கந்தர் ரசா | ஜிம் | 290 |
| அஸ்மத்துல்லா ஒமர்ஷாய் | ஆப்கா | 263 |
| மெஹிதி ஹசன் | பங்க | 248 |
| ரஷீத்கான் | ஆப்கா | 244 |
| மிட்செல் சாண்ட்னர் | நியூஸி | 242 |
| க்ளன் மேக்ஸ்வெல் | ஆஸி | 220 |
| ப்ரெண்டன் மேக்முலன் | ஸ்காட் | 219 |
| ரவிந்திர ஜடேஜா | இந்தி | 213 |
| கெர்ஹார்ட் யராஸ்மஸ் | நமி | 209 |

# அழகு

மசாலா

*An Initiative of a Group of Woman*

fssai
22424031000208




**NO**
Artificial flavors
Preservatives
Added colors



## விலைப்பட்டியல்

| ( 1 கிலோ) | MRP | புதிய விலை |
|---|---|---|
| மஞ்சள் தூள் | ரூ.400 | ரூ.300 |
| தனி மிளகாய் தூள் | ரூ.500 | ரூ.350 |
| மல்லி தூள் | ரூ.350 | ரூ.250 |
| குழம்பு மிளகாய் தூள் | ரூ.400 | ரூ.320 |
| ரசப்பொடி | ரூ.700 | ரூ.550 |
| சாம்பார் பொடி | ரூ.440 | ரூ.350 |
| பிரியாணி மசாலா | ரூ.850 | ரூ.700 |
| கரம் மசாலா | ரூ.750 | ரூ.600 |

For Orders
**888 30 29 301**
Taste Made for you!





அனைத்து மசாலாக்களும் 50 கிராம் முதல் 1 கிலோ பேக்குகள் வரை கிடைக்கும்.

Page : 01

# அழகு மசாலா

*An Initiative of a Group of Woman*

fssai
22424031000208




**NO**
Artificial flavors
Preservatives
Added colors



## விலைப்பட்டியல்

(இட்லி பொடி வகைகள்)

| (1 கிலோ) | MRP | புதிய விலை |
|---|---|---|
| இட்லி பொடி | ரூ.350 | ரூ.300 |
| சென்னாகுன்னி பொடி | ரூ.800 | ரூ.600 |
| கருவேப்பிலை பொடி | ரூ.550 | ரூ.450 |
| **Rice Mix** | | |
| பருப்பு சாதம் பொடி | ரூ.600 | ரூ.400 |

For Orders
**888 30 29 301**
Taste Made for you!





அனைத்து மசாலாக்களும் 50 கிராம் முதல் 1 கிலோ பேக்குகள் வரை கிடைக்கும்.

Page : 02

# கொஞ்சம் கிரிக்கெட் நிறைய நினைவுகள்

2011 உலகக் கோப்பை

2011 உலகக் கோப்பையின்போது நான் தங்கியிருந்தது சைதாப்பேட்டை மேன்ஷனில். எங்க மேன்ஷன் இருந்தது பனகல் மாளிகைக்குப் பின்புறம், ராஜ் தியேட்டரில் இருந்து மார்க்கெட் சப்வே செல்லும் சந்தில். எங்களுடைய அறை மொட்டை மாடியில். பக்கத்தில் இருந்த அருண் அறையில் தான் டிவி இருந்தது.

அருணைவிட நாங்கள் தான் அதிகமாக டிவி பார்ப்பது. ஆனா கேபிள்காரன் வரும் போது யாரும் கண்டுகொள்வது இல்லை. அலுவலகம் நந்தனம் டெம்பிள் டவரில் சித்தார் வெசல்ஸ்.

அலுவலகத்தில் பெரிய தலைகளுக்கு மட்டுமே இண்டர்நெட் உண்டு. எங்கள் கணினிகளில் இணைய வசதி இல்லாததால் வெளியே சென்று வரும் ஆபிஸ் பாய்கள் தான் எங்களுக்கு ஸ்கோர் சொல்லும் வெப்பன் சப்ளயர். சிஸ்டம்ஸ் செந்தில் சார் வந்த பிறகு அவருடைய சிஸ்டத்தில் எப்போதும் கிரிக் இன்ஃபோ இருக்கும்.

2011 உலகக் கோப்பையில் முதல் போட்டி பங்களாதேஷ் உடன். இந்திய அணி பங்களாதேஷில் அந்தப் போட்டியை ஆடியது. சேவாக் மற்றும் கோலி சதங்களால் பெரிய ஸ்கோரை எட்டியது. பங்களாதேஷ் எளிதில் விடவில்லை. தமிம், ஷகீப் அரைசதம் அடிக்க 280+ ரன்கள் அடித்தது.

இரண்டாவது போட்டியில் இந்தியா 338 அடித்தது. 49 ஓவரில் பியூஸ் சாவ்லா இரண்டு சிக்ஸ் கொடுக்க, போட்டி டையில் முடிந்தது. பியூஸ் சாவ்லாவை திட்டிக்கொண்டே அந்த இரவைக் கடத்தினோம்.



அடுத்த போட்டி அயர்லாந்தோடு. அயர்லாந்து 207 தான் அடித்தது. இரண்டாவது ஓவரில் சேவாக் விக்கெட்டை வீழ்த்தி சிக் டான்ஸ் ஆடினார் ஜான்ஸ்டன். சற்றே தடுமாறினாலும் வென்று விட்டது. நெதர்லாந்து உடனான போட்டி மட்டுமே கொஞ்சம் எளிதான போட்டியாக அமைந்தது.

தென்னாப்பிரிக்கா போட்டியில் இந்தியா 296 ரன்கள் எடுத்தது. சச்சின் டெண்டுல்கர் சதமடித்தார். தென்னாப்பிரிக்கா சேஸ் செய்து வென்றது. கடைசி ஓவரில் 13 ரன்கள் தேவைப்பட நெக்ரா கொடுத்தது 4, 6, 2, 4. அத்தனை ரன் கொடுத்த பிறகும் நெக்ரா பல்லைக் காட்டியது தான் எரிச்சலைத் தந்தது.

கடைசி லீக் போட்டி சென்னையில் நடந்தது. வென்றால் காலிறுதி என்ற நிலை. இந்தியா 268 ரன்களை எடுத்தது. முதல் 5 ஓவர்கள் வெஸ்ட் இண்டீஸ் சிறப்பாக ஆட நாங்கள் (நான், ராஜ்குமார், வசந்த்) கடுப்பாகி ராஜ் தியேட்டரில் படம் பார்க்க சென்றோம். நாடோடி மன்னன் படம். பழைய காலப் படம் என்பதால் திரை நடுவில் சதுரமாகப் படம் தெரிந்தது. இண்டர்வெல் முடிந்த பிறகும் படம் கருப்பு வெள்ளையாக ஓடியது. கடுப்பாகித் திரும்பினோம். அறைக்கு வந்தால் இந்தியா வென்று விட்டது என்ற தகவல்.

அடுத்ததெல்லாம் நாக் அவுட். அப்போ நாங்க வேண்டிக் கொண்டது ரெண்டு விசயங்களை. ஒண்ணு சச்சின் சதமடிக்கக்கூடாது (சச்சின் சதமடித்த இங்கிலாந்து போட்டி டை, தென்னாப்பிரிக்கா போட்டி தோல்வி). இரண்டாவது, நெக்ரா டீம்ல இருக்கக்கூடாது.

காலிறுதி ஆஸ்திரேலியாவோடு. மீண்டும் சேசிங்கா (1999, 2003 உலகக் கோப்பை) என்ற பயம் இருந்தது. யுவராஜ் காப்பாற்ற, கூட ரெய்னாவும் உதவ இந்தியா வென்றது.

அரையிறுதியில் பரம எதிரி பாகிஸ்தான். டெண்டுல்கர் சதமடிக்கவில்லை. இந்தியப் பந்துவீச்சாளர் ஐவரும் தலா 2 விக்கெட்டுகளை எடுத்து காப்பாற்றினர். இன்னும் ஒரு போட்டி என்று மனது மகிழ்ச்சியில் குதித்தது.



இறுதிப் போட்டியில் ஒவ்வொரு நிமிடமும் பதட்டத்துடனே கடந்தது. ஜெயவர்த்தனே சதம், சேவாக் அவுட், சச்சின் விரைவாக அவுட் ஆனது, முரளிதரன் பந்துவீச்சு, விராட் கோலி அவுட், கம்பீர் சதமடிக்காமல் அவுட் ஆனது என. இறுதி சிக்ஸை அடித்த தோனி எப்படிக் கொண்டாடுவது என்று தெரியாமல் மெய் மறந்திருந்த சில வினாடிகள் இன்றும் நினைவில் உள்ளது.

போட்டி முடிந்த பிறகு இரவு உணவு சாப்பிடவில்லை என்ற நினைவு வந்தது. ஒரு வழியாக சாப்பாடு வாங்க செல்லும் போது மணி 12 தாண்டி விட்டது. மார்க்கெட் சப்வே இறக்கத்தில் நல்ல போதையில் ஒரு கார், தே குவாங்கே என்று கத்திக்கொண்டே சென்றான். பார்ப்பவர்கள் எல்லாம் என்னைப் பார்த்து தம்ஸ் அப் காட்டி மகிழ்ச்சியைத் தெரிவித்தனர். ஏன் என்று யோசித்த போது நான் இந்திய அணி ஜெர்ஸியை அணிந்திருந்தது தெரியவந்தது.

நாங்கள் அடிக்கடி சாப்பிடும் பிளாட்பார்ம் கடையில், கடைசி மாவில் எனக்கும் தினேஷ்க்கும் தோசை வாங்கினோம். சாப்பாடு வாங்கி விட்டு மார்க்கெட் சப்வே அருகில் இருந்து கூப்பாடு கேட்டது. தர்மா சாப்பாடு வாங்க வந்திருந்தான். திரும்ப எல்லாரும் சாப்பாடு வாங்கப்போனால் ப்ளாட்பார்ம் கடை மூடி விட்டார். ஜோன்ஸ் ரோடு சப்வே அருகில் ஒரு கடை மட்டும் இருந்தது. அதிலும் கூட்டம், அடித்துப் பிடித்து கல்தோசை வாங்கி வந்து சாப்பிட்டோம். புளித்த தோசை தான் ஆனால் மகிழ்ச்சியால் இனித்தது அந்த தோசை. நான், வசந்த், சின்ன தினேஷ், தர்மா, ராஜ்குமார் என சாப்பிட்டு தூங்க மணி இரண்டைத் தாண்டியது. அருண் சீக்கிரமாக சாப்பிட்டுவிட்டான். அன்றைய இரவு மகிழ்ச்சியான தூக்கம் வந்தது.



# மைல் கல்லை எட்டியவர்கள்

| | | |
|---|---|---|
| 7000 | நியூசிலாந்து அணியின் முன்னாள் கேப்டன் கனே வில்லியம்சன் ஒருநாள் போட்டிகளில் 7000 ரன்களைக் கடந்தார் |  |
|  | அமெரிக்க அணி கேப்டன் மோனக் பட்டேல் ஒருநாள் போட்டிகளில் 2000 ரன்களைக் கடந்தார். | 2000 |
| 2000 | ஆஸ்திரேலிய அணியின் விக்கெட் கீப்பர் அலெக்ஸ் கேரி ஒருநாள் போட்டிகளில் 2000 ரன்களைக் கடந்தார் |  |
|  | தென்னாப்பிரிக்கா அணியின் விக்கெட் கீப்பர் ஹென்ரிச் கிளாஸ்ஸன் ஒருநாள் போட்டிகளில் 2000 ரன்களைக் கடந்தார் | 2000 |

துடுப்பாட்டம்
கிரிக்கெட்டும் கிரிக்கெட் சார்ந்தும்

| மைல் கல்லை எட்டியவர்கள் | | |
|---|---|---|
| 1000 | அயர்லாந்து அணியின் கர்டிஸ் காம்பர் ஒருநாள் போட்டிகளில் 1000 ரன்களைக் கடந்தார். | |
| | பாகிஸ்தான் அணியின் முன்னாள் கேப்டன் பாபர் அசாம் ஒருநாள் போட்டிகளில் 6000 ரன்களைக் கடந்தார். | 6000 |
| 11000 | ஒருநாள் போட்டிகளில் 11000 ரன்களைக் கடந்தார் இந்திய கேப்டன் ரோகித் சர்மா. | |
| | ஒருநாள் போட்டிகளில் தனது 200வது விக்கெட்டை வீழ்த்தினார் இந்திய வேகப்பந்து வீச்சாளர் முகமது ஷமி. | 200 |
| 14000 | இந்திய அணியின் நட்சத்திர வீரர் விராட் கோலி ஒருநாள் போட்டிகளில் 14000 ரன்களைக் கடந்தார் | |

| மைல் கல்லை எட்டியவர்கள் | | |
|---|---|---|
| 1000 | நியூசிலாந்து அணியின் ரச்சின் ரவீந்திரா ஒருநாள் போட்டிகளில் 1000 ரன்களைக் கடந்தார். | |
| | நியூசிலாந்து அணியின் ஆல்ரவுண்டர் க்ளென் பிலிப்ஸ் ஒருநாள் போட்டிகளில் 1000 ரன்களைக் கடந்தார். | 1000 |
| 1000 | இங்கிலாந்து அணியின் துவக்க வீரர் பென் டக்கெட் ஒருநாள் போட்டிகளில் 1000 ரன்களைக் கடந்தார். | |
| | இங்கிலாந்து அணியின் வேகப்பந்து வீச்சாளர் ஜோப்ரா ஆர்ச்சர் ஒருநாள் போட்டிகளில் தனது 50வது விக்கெட்டை வீழ்த்தினார். | 50 |
| 1000 | ஆப்கானிஸ்தான் அணியின் ஆல்ரவுண்டர் அஸ்மத்துல்லா ஓமர்சாய் ஒருநாள் போட்டிகளில் 1000 ரன்களைக் கடந்தார். | |

# என்ன ஆச்சு ஜிம்பாப்வேக்கு

ஜிம்பாப்வே ஐசிசியின் நிரந்தர உறுப்பினர் என்றாலும் மிகக் குறைந்த அளவே டெஸ்ட் போட்டிகள் ஆட வாய்ப்பு கிடைக்கிறது. சமீபத்தில் ஆப்கானிஸ்தான் அணிக்கு எதிரான டெஸ்ட் தொடரில் ஒன்றை டிரா செய்து மற்றொன்றில் தோல்வி அடைந்தது. இந்த நிலையில் அயர்லாந்து அணிக்கு எதிராக ஒரு டெஸ்ட் போட்டி அமைந்தது. அதை ஜிம்பாப்வே ஒழுங்காகப் பயன்படுத்திக் கொண்டதா என்றால் இல்லை.

கடைசி நேரத்தில் கேப்டன் கிரேக் இர்வின் விலகினார். நட்சத்திர வீரர் சிக்கந்தர் ரஸா ஐஎல்டி 20 விளையாட சென்று விட்டார். புதிய கேப்டனாக சீனியர் வீரர்களை நியமிக்காமல் அறிமுக வீரர் ஜோனத்தன் கேம்ப்பெலை நியமித்தது ஜிம்பாப்வே அணி நிர்வாகம்.




அயர்லாந்து டாஸ் வென்று பேட்டிங்கைத் தேர்வு செய்தது. ஜிம்பாப்வே வேகப்பந்து வீச்சாளர்கள் சிறப்பாகப் பந்து வீசினர். 31 ரன்களுக்கு 5 விக்கெட்டுகளை இழந்தது அயர்லாந்து.

பந்து வீச்சு ஆல்ரவுண்டர்கள் மார்க் அடேர் (78), மெக்பிரைன்(90*) கை கொடுக்க அயர்லாந்து 260 ரன்கள் எடுத்தது. ஜிம்பாப்வே தரப்பில் பிளஸிங் முசாரபானி 7 விக்கெட்டுகளை வீழ்த்தினார். ரிச்சர்ட் இங்காரவா இரண்டு விக்கெட்டுகளையும் குவண்டு ஒரு விக்கெட்டையும் வீழ்த்தினர்.

ஜிம்பாப்வேயும் சொல்லிக் கொள்ளும் படி ஆடவில்லை. அறிமுக வீரர் நிக் வெல்க் 90 ரன்கள் அடித்தார். பந்துவீச்சில் காப்பாற்றிய முசாரபானி தன் பங்கிற்கு 47

ரன்கள் அடித்தார். ஜிம்பாப்வே 267 ரன்களுக்கு ஆல் அவுட் ஆனது. அயர்லாந்து தரப்பில் மெக்கார்தி - 4, மெக்பிரைன் - 3, அடேர் -2, ஹம்ப்ரேஸ் -1 என விக்கெட்டைப் பகிர்ந்து கொண்டனர்.

அயர்லாந்து அணி இரண்டாவது இன்னிங்ஸில் ஓரளவு சிறப்பாக ஆடியது. ஜிம்பாப்வே அணியில் முதல் நிலை சுழற்பந்து வீச்சாளர் யாரும் இல்லை. அயர்லாந்து கேப்டன் பால்பெர்னி (66), கீப்பர் டக்கர் (58) அரை சதம் அடிக்க அயர்லாந்து 298 ரன்கள் எடுத்தது.

ஜிம்பாப்வே தரப்பில் இங்காரவா 4 விக்கெட்டுகளையும் குவண்டு, மாதவரே தலா 2 விக்கெட்டுகளையும் வீழ்த்தினர். ஜிம்பாப்வே கேப்டன் ஜோனத்தன் கேம்ப்பெல் தனது முதல் டெஸ்ட் விக்கெட்டாக ஹாரி டெக்டர் விக்கெட்டை வீழ்த்தினார்.

292 என்ற இலக்கைத் துரத்திய ஜிம்பாப்வே ஹம்ப்ரேஸ் சுழலில் சிக்கி 228 ரன்களுக்கு ஆல் அவுட் ஆனது. அயர்லாந்து 63 ரன்கள் வித்தியாசத்தில் வென்றது. ஹம்ப்ரேஸ் ஆறு விக்கெட்டுகளை வீழ்த்தினார். 4 விக்கெட்டுகள் மற்றும் 90 ரன்கள் அடித்த மெக்ப்ரைன் ஆட்டநாயகன் ஆனார்.




அயர்லாந்து அணி தொடர்ச்சியாக வென்ற மூன்றாவது டெஸ்ட் போட்டி இது. அதில் இரண்டு ஜிம்பாப்வேயுடன் என்பது குறிப்பிடத்தக்கது.

ஜிம்பாப்வே அணி நிர்வாகம் டெஸ்ட் போட்டிகளுக்கு வீரர்களை சிறப்பாகத் தயார்படுத்தினால் மட்டுமே டெஸ்ட் அந்தஸ்தைத் தக்கவைக்க முடியும். ஜிம்பாப்வேக்கு அடுத்த டெஸ்ட் இங்கிலாந்து அணிக்கு எதிராக.




| இந்த மாத போட்டிகள் - மார்ச் 2025 | | | | |
|---|---|---|---|---|
| **தேதி** | **ஆடும் அணிகள்** | | **மைதானம்** | **போட்டி** |
| மார்ச் 1 | இங்கிலாந்து | தென் ஆப்பிரிக்கா | கராச்சி | ஒருநாள் |
| மார்ச் 2 | நியூஸிலாந்து | இந்தியா | துபாய் | ஒருநாள் |
| மார்ச் 4 | அரை இறுதி 1 | | துபாய் | ஒருநாள் |
| மார்ச் 5 | அரை இறுதி 2 | | லாகூர் | ஒருநாள் |
| மார்ச் 5 | கனடா | நெதர்லாந்து | வின்டூக் | ஒருநாள் |
| மார்ச் 7 | நமீபியா | நெதர்லாந்து | வின்டூக் | ஒருநாள் |
| மார்ச் 9 | இறுதிப்போட்டி | | லாகூர் / துபாய் | ஒருநாள் |
| மார்ச் 9 | நமீபியா | கனடா | வின்டூக் | ஒருநாள் |
| மார்ச் 11 | கனடா | நெதர்லாந்து | வின்டூக் | ஒருநாள் |
| மார்ச்13 | நமீபியா | நெதர்லாந்து | வின்டூக் | ஒருநாள் |
| மார்ச் 15 | நமீபியா | கனடா | வின்டூக் | ஒருநாள் |
| மார்ச் 16 | நியூஸிலாந்து | பாகிஸ்தான் | கிறிஸ்ட்சர்ச் | டி20 |
| மார்ச் 18 | நியூஸிலாந்து | பாகிஸ்தான் | டுனிடின் | டி20 |
| மார்ச் 21 | நியூஸிலாந்து | பாகிஸ்தான் | ஆக்லாந்து | டி20 |
| மார்ச் 23 | நியூஸிலாந்து | பாகிஸ்தான் | மவுண்ட் மங்னேனி | டி20 |
| மார்ச் 26 | நியூஸிலாந்து | பாகிஸ்தான் | வெலிங்டன் | டி20 |
| மார்ச் 29 | நியூஸிலாந்து | பாகிஸ்தான் | நேப்பியர் | ஒருநாள் |
| | | | | |

# இண்டர்நேஷனல் லீக்

எமிரேட்ஸில் நடைபெறும் இண்டர்நேஷனல் லீக்கின் 3வது சீசன் ஜனவரி 11 முதல் பிப்ரவரி 9 வரை நடைபெற்றது. இம்பாக்ட் ப்ளேயர் விதிமுறை இங்கும் செயல்பட்டது. ஆடும் 11ல் இரண்டு எமிரேட்டிய வீரர்கள் குறைந்தபட்சம் இருக்க வேண்டும் என்பது இன்னொரு விதிமுறை.

அணிகள் - கேப்டன்

துபாய் கேப்பிட்டல்ஸ் - சிக்கந்தர் ரஸா

எம்ஐ எமிரேட்ஸ் - நிக்கோலஸ் பூரான்

அபுதாபி நைட்ரேடர்ஸ் - சுனில் நரைன்

டெசர்ட் வைப்பர்ஸ் - லூக்கி பெர்குசன்

கல்ப் ஜெயின்ட்ஸ் - ஜேம்ஸ் வின்ஸ்

ஷார்ஜா வாரியர்ஸ் - டிம் சௌதி




**<u>பரபரப்பான முதல் போட்டி</u>**

ஜனவரி 11ல் நடைபெற்ற முதல் போட்டியில் துபாய் கேப்பிட்டல்ஸ் அணி முதலில் பேட்டிங் செய்து 8 விக்கெட் இழப்பிற்கு 133 ரன்கள் அடித்தது. பிரன்டன் மெக்முலன் 58 ரன்கள் அடித்தார். பந்துவீச்சில் எம்ஐ எமிரேட்ஸ் சார்பில் பஸல்ஹக் பரூக்கி 5 விக்கெட்டுகளை வீழ்த்தினார். சேஸ் செய்த எம்ஐ எமிரேட்ஸ் அணிக்குக் கடைசி 18 பந்துகளில் 19 ரன்களே தேவைப்பட்டது. 18வது ஓவர் பந்து வீசிய குல்பதீன் நயீப் 5 ரன்கள் மட்டுமே கொடுத்து பூரான் மற்றும் அல்ஸாரி ஜோசப் விக்கெட்டுகளை வீழ்த்தினார்.

19வது ஓவரை ஆலி ஸ்டோன் வீசினார். ஒரு ரன் மட்டுமே கொடுத்தார். கடைசி ஓவரில் 13 ரன்கள் தேவைப்பட நயீப் பந்து வீசினார். பேட்டிங் முனையில் கைரன் பொல்லார்ட். முதல் 5 பந்துகளில் பொல்லார்ட் ஒரு போர், ஒரு இரண்டு ரன் எடுத்தார். வைடில் ஒரு ரன் கிடைத்தது. கடைசிப் பந்தில் 6 ரன்கள் எடுத்தால் வெற்றி என்ற நிலையில் பொல்லார்ட் அடித்த பந்து ஒன் பவுண்ஸ் போரானது. எம்ஐ எமிரேட்ஸ் அணி ஒரு ரன் வித்தியாசத்தில் தோற்றது.

**<u>ஒரே போட்டியில் அதிகபட்சம் & குறைந்தபட்சம்</u>**

ஜனவரி 27ல் நடைபெற்ற போட்டியில் எம்ஐ எமிரேட்ஸ் அணி 2 விக்கெட் இழப்பிற்கு 228 ரன்களைக் குவித்தது. இதுவே இந்தத் தொடரில் அதிகபட்ச ரன் ஆகும். டாம் பேன்டன் 55 பந்துகளில் 105 ரன்கள் (9*4 7*6) அடித்தார். ஆன்ட்ரே ப்ளெட்சர் 50 பந்துகளில் 96* ரன்கள் (10*4 3*6) அடித்தார்.

அதே போட்டியில் சேஸ் செய்த டெசர்ட் வைப்பர்ஸ் அணி 74 ரன்களுக்கு ஆல் அவுட் ஆனது. இது தான் இந்தத் தொடரில் குறைந்தபட்ச ரன் ஆகும். எம்ஐ எமிரேட்ஸ் தரப்பில் முகமது ரோகிட் மற்றும் அல்ஸாரி ஜோசப் தலா 3 விக்கெட்டுகளை வீழ்த்தினர்.




**<u>நம்பிக்கை தந்த நயீப் மற்றும் ஹோப்</u>**

ஜனவரி 26ல் நடைபெற்ற போட்டியில் அபுதாபி நைட்ரைடர்ஸ் அணி சரித் அசலங்க அரைசதத்தால் (74) 4 விக்கெட் இழப்பிற்கு 203 ரன்களைக் குவித்தது. சேஸ் செய்த துபாய் கேப்பிட்டல்ஸ் அணியில் குல்பதீன் நயீப் (80) & சாய் ஹோப் (74*) அரைசதம் அடிக்க 8 விக்கெட் வித்தியாசத்தில் வென்றது. இந்தத் தொடரில் அதிகபட்ச சேஸ் இதுதான்.

**குவாலிபயர் 1 - துபாய் - பிப்ரவரி 5**

*டெசர்ட் வைப்பர்ஸ் - 189/7*

அலெக்ஸ் ஹேல்ஸ் - 67

*குல்பதீன் நயீப் - 2/25*

*துபாய் கேப்பிட்டல்ஸ் - 193/5*

குல்பதீன் நயீப் - 62

லூக்கி பெர்குசன் - 2/32

***துபாய் கேப்பிட்டல்ஸ் 5 விக்கெட் வித்தியாசத்தில் வெற்றி***

கடைசி ஓவரில் வெற்றி பெற 12 ரன்கள் தேவைப்பட்டது. லூக்கி பெர்குசன் பந்து வீசினார். முதல் பந்து வைடு, மீண்டும் வீசப்பட்ட பந்தில் 2, 2வது பந்தில் போர், அடுத்த இரண்டு பந்துகளில் தலா இரண்டு ரன்கள் அடித்த நயீப் 5வது பந்தில் அவுட்டானார்.

கடைசிப் பந்தை வீச முடியாமல் தசைப்பிடிப்பு காரணமாக வெளியேறினார் பெர்குசன். கடைசிப் பந்தை முகமது அமீர் வீசினார், சிக்கந்தர் ரஸா அதைப் பவுண்டரியாக்கி அணியை இறுதிப் போட்டியில் நுழைய வைத்தார்.

ஆட்டநாயகன் - குல்பதீன் நயீப் - 2/25, 2 கேட்ச் & 62




**எலிமினேட்டர் - அபுதாபி - பிப்ரவரி 6**

*எம்ஐ எமிரேட்ஸ் - 146/8*

நிக்கோலஸ் பூரான் - 42

டிம் சௌதி - 2/24

*ஷார்ஜா வாரியர்ஸ் - 149/4*

டாம் கோக்லர் கேட்மோர் - 40

டிம் செய்பிரட் - 40*

முகமது ரோகிட் 3/32

***ஷார்ஜா வாரியர்ஸ் 6 விக்கெட் வித்தியாசத்தில் வெற்றி***

ஆட்டநாயகன் டிம் செய்பிரட் - 40*

**குவாலிபயர் 2 - ஷார்ஜா - பிப்ரவரி 7**

*ஷார்ஜா வாரியர்ஸ் - 162/7*

ஜேஸன் ராய் - 73

குஸைமா தன்வீர் - 2/20

*டெசர்ட் வைப்பர்ஸ் - 165/3*

மேக்ஸ் ஹோல்டன் - 48

ஆடம் மிலினே - 2/26

***டெசர்ட் வைப்பர்ஸ் 7 விக்கெட் வித்தியாசத்தில் வெற்றி***

ஆட்டநாயகன் அலெக்ஸ் ஹேல்ஸ் – 47



**<u>இறுதிப் போட்டி - துபாய் - பிப்ரவரி 9</u>**

*டெசர்ட் வைப்பர்ஸ் - 189/5*

மேக்ஸ் ஹோல்டன் - 76

ஒபைட் மெக்காய் - 2/44

*துபாய் கேப்பிட்டல்ஸ் - 191/6*

ராவ்மென் பவல் - 63

டேவிட் பெய்னே - 2/28

***துபாய் கேப்பிட்டல்ஸ் 4 விக்கெட் வித்தியாசத்தில் வெற்றி***

ஆட்டநாயகன் - ராவ்மென் பவல் - 63

தொடர் நாயகன் - சாம் கர்ரன் - 387 ரன்கள் & 7 விக்கெட்டுகள்




**<u>அதிக ரன்கள் அடித்த வீரர்கள்</u>**

சாய் ஹோப் -527

டாம் பேன்டன் - 493

அலெக்ஸ் ஹேல்ஸ் - 405

டாம் கோக்லர் கேட்மோர் - 388

சாம் கர்ரன் - 387

**அதிக ரன்கள் அடித்த எமிரேட்ஸ் வீரர்கள்**

அலிஸன் ஷராபு - 220

முகமது வசீம் - 183

ரோகன் முஸ்தபா - 102

**அதிக விக்கெட் எடுத்த வீரர்கள்**

பஸல்ஹக் பரூக்கி - 21

ஜேஸன் ஹோல்டர் - 17

பிளசிங் முசாரபானி - 16

அல்ஸாரி ஜோசப் - 16

முகமது அமீர் - 14

**அதிக விக்கெட் எடுத்த எமிரேட்ஸ் வீரர்கள்**




ஆயன் அப்சல் கான் - 10

முகமது ரோகிட் - 10

குஸைமா தன்வீர் -7

# சாம்பியன்ஸ் டிராபி ஹைலைட்ஸ்

**நியூசிலாந்து - பாகிஸ்தான்**

வலது கை பேட்ஸமேன் வில் யங் பொறுமையாக ஆடி சதமடிக்க, இடதுகை டாம் லாத்தம் சற்று அதிரடியாக ஆடி சதமடித்தார். கடைசி கட்டத்தில் பில்ப்ஸ் அதிரடி அரைசதம் அடிக்க நியூசிலாந்து 320 ரன்களை குவித்தது.




துவக்க வீரர் களமிறங்க முடியவில்லை என்ற துரதிர்ஷ்டத்தோடு துவங்கியது பாகிஸ்தான். நியூசிலாந்து பந்து வீச்சாளர்கள் இலக்கை நெருங்கவிடவில்லை. பாபர், குஷ்தில் அரைசதங்கள் மட்டுமே ஆறுதல் பாகிஸ்தானிற்கு.



நியூசிலாந்து 60 ரன்கள் வித்தியாசத்தில் வெற்றி

**பங்களாதேஷ் - இந்தியா**

முதல் 5 விக்கெட்டுகளை எளிதாக எடுத்த இந்தியாவுக்கு தலைவலி தந்தார்கள் இளம் வீரர்கள் டௌகித் ஹிரிடாய் மற்றும் ஜாகெர் அலி. ஹிரிடாய் ஒருநாள் போட்டிகளில் முதல் சதமடிக்க பங்களாதேஷ் கௌரவமான 228 ரன்களை அடித்தது.




ஷமி 5 விக்கெட்டுகளை வீழ்த்தினார். அக்சரின் ஹாட்ரிக் வாய்ப்பை அஸ்கு புஸ்கு ஆக்கினார் ரோகித்.

சுப்மன் கில் சதமடிக்க இந்தியா எளிதாக வென்றது.




இந்தியா 6 விக்கெட் வித்தியாசத்தில் வெற்றி

**ஆப்கானிஸ்தான் - தென்னாப்பிரிக்கா**

கிளாஸன் காயம் காரணமாக ஆடாததால் வாய்ப்பு பெற்றார், ரிக்கெல்டன் வாய்ப்பை சிறப்பாக பயன்படுத்தி சதமடித்தார். கேப்டன் பவுமா அரைசதம், மார்க்ரம், வாண்டர்டர்சன் அதிரடி அரை சதம் அடிக்க தென்னாப்பிரிக்கா 315 ரன்கள் குவித்தது.




வழக்கம் போல குர்பாஸ் அவசரப்பட்டு விக்கெட் கணக்கை துவக்கி வைத்தார். நிதானமாக ஆடிய ரஹ்மத் ஷாவின் 90 விழலுக்கு இறைத்த நீராய் போனது.



தென்னாப்பிரிக்கா 107 ரன்கள் வித்தியாசத்தில் வெற்றி.

**இங்கிலாந்து - ஆஸ்திரேலியா**

லாகூர் மைதானத்தில் பந்துவீச்சு பெரிய அளவில் எடுபடாது என்பதால் ஆஸ்திரேலியா செய்த விசயம், நான்கு பந்து வீச்சாளர்களுடன் களம் இறங்கியது, மேக்ஸ்வெல் 5வது பந்து வீச்சாளர் என்ற அடிப்படையில். இங்கிலாந்து முதலில் பேட் செய்து 8 விக்கெட் இழப்பிற்கு 351 ரன்களைக் குவித்தது. பென் டக்கெட் 165 ரன்கள் அடித்தார். சாம்பியன்ஸ் டிராபி தொடரில் தனிநபர் அதிகபட்ச ரன் அது. ரூட் தனது பங்கிற்கு 68 ரன்கள் அடித்தார். ஆஸ்திரேலியா தரப்பில் தார்சுவிஸ் 3 விக்கெட்டுகளையும், ஸாம்பா, லபுசேன் தலா 2 விக்கெட்டுகளையும் வீழ்த்தினர்.




ஆஸ்திரேலிய அணியின் ஜோஷ் இங்லிஷ் - கேரி இணை சிறப்பாக ஆடி பெரிய இலக்கை எளிமையாக எட்டியது. ஜோஷ் இங்லிஷ் (120*) கேரி (69) மேத்யூ ஷார்ட் (63) ரன்கள் அடித்தனர். இங்கிலாந்து அணியில் சொல்லிக் கொள்ளும்படி யாரும் பந்து வீசவில்லை. சிக்கனமான பந்து வீச்சு என்றால் அடில் ரஷீத்- 10-1-47-1

ஆஸ்திரேலியா 5 விக்கெட் வித்தியாசத்தில் வெற்றி.



**இந்தியா - பாகிஸ்தான்**

பழைய பகை மிச்சமிருக்கிறது என்று பரபரப்பாக பேசப்பட்ட போட்டி துபாயில் நடைபெற்றது. ஆடுகளம் மெதுவாக இருந்ததால் பாகிஸ்தான் பெரிதாக ரன் குவிக்க முடியவில்லை. ஆனால் பாகிஸ்தான் ரொம்ப மெதுவாக ஆடியதால் 241 ரன்களுக்கு ஆல் அவுட் ஆனது. சவுத் ஷகீல் 62 ரன்களும், கேப்டன் ரிஸ்வான் 42 ரன்களும் எடுத்தனர். குல்தீப் யாதவிற்கு ஹாட்ரிக் வாய்ப்பு வந்தது, ஆனால் கிடைக்கவில்லை. குல்தீப் 3 விக்கெட்டுகளையும், ஹர்திக் பாண்ட்யா 2 விக்கெட்டுகளையும் வீழ்த்தினர்.




இலக்கு சிறியது என்றாலும் ஆடுகளத்தின் தன்மை பெரிய சவாலாக இருந்தது. ஷாகின் அப்ரிடியும் சிறப்பாகத் துவக்கினார். கில் - கோலி இணை ஆடுகளத்தின் தன்மையை உணர்ந்து சிறப்பாக ஆடியது. அடுத்து வந்த ஷ்ரேயாஸ் ஐயரும்(56) சிறப்பாக ஆடினார். போர் அடித்து வெற்றிக்கான ரன்னை அடித்தார் விராட் கோலி. அதன் மூலம் விராட் எட்டியது ஒருநாள் போட்டிகளில் 51வது சதத்தை.



இந்தியா 6 விக்கெட் வித்தியாசத்தில் வெற்றி.

**பங்களாதேஷ் - நியூசிலாந்து**

ராவல்பிண்டியில் நடைபெற்ற இந்தப் போட்டியில் பங்களாதேஷ் 9 விக்கெட் இழப்பிற்கு 236 ரன்களே எடுத்தது. கேப்டன் சாண்டோ (77) அரை சதம் அடித்தார். ஜாகெர் அலி 45 ரன்கள் அடித்தார். நியூசிலாந்து அணியின் பகுதி நேரப் பந்து வீச்சாளர் மைக்கேல் ப்ரேஸ்வெல் 4 விக்கெட்டுகளை வீழ்த்தினார்.




பங்களாதேஷ் சிறப்பாகப் பந்து வீச்சைத் துவக்கியது. 15 ரன்களுக்கு இரண்டு விக்கெட்டுகளை வீழ்த்தியது. ஆனால் இடதுகை பேட்ஸ்மேன்கள் ரச்சின் ரவீந்திரா (112) மற்றும் டாம் லாத்தம் (55) பங்களாதேஷ் பந்துவீச்சை சின்னாபின்னமாக்கினர்.



நியூசிலாந்து 5 விக்கெட் வித்தியாசத்தில் வெற்றி.

## ஆப்கானிஸ்தான் - ஆஸ்திரேலியா

இரு அணிகளுக்கும் முக்கியத்துவம் வாய்ந்த இந்தப் போட்டி லாகூரில் நடைபெற்றது. டாஸ் வென்று ஆப்கானிஸ்தான் பேட்டிங் செய்தது. முதல் ஓவரில் குர்பாஸ் வீழ்ந்தார். ஷத்ரானும் பெரிய அளவில் ஆடவில்லை. செடிக்குல்லா அடல் போராடி 85 ரன்கள் அடித்தார். 49 பந்துகளில் 20 ரன்கள் அடித்த கேப்டன் ஷாகிதியின் ஆட்டம் அடலுக்கு அழுத்தத்தைக் கொடுத்திருக்கும். ஓமர்சாய் 67 ரன்கள் அடித்தார். ஆப்கானிஸ்தான் 273 ரன்களை எட்டியது. தார்சுவிஸ் 3 விக்கெட்டுகளையும், ஜான்சன் மற்றும் ஸாம்பா தலா 2 விக்கெட்டுகளையும் வீழ்த்தினர்.




எப்போது வேண்டுமானாலும் மழை வரலாம் என்ற நிலையில் ஆஸ்திரேலியா அதிரடியாகத் துவங்கியது. சரியாக ஓட முடியாவிட்டாலும் ஷார்ட் களமிறங்கினார். ரஷீத்கான், டிராவிஸ் ஹெட் கொடுத்த கேட்ச்சையும், கரோட்டே, ஷார்ட் கொடுத்த கேட்ச்சையும் தவறவிட்டனர். ஷார்ட் மீண்டும் கேட்ச் கொடுத்து வீழ்ந்தார். 12.5 ஓவர்களில் ஆஸ்திரேலியா 109 ரன்கள் எட்டியிருந்த போது மழை வந்தது. டக்வொர்த் லீவிஸ் ஸ்கோர் 20 ஓவருக்கு 123, 30 ஓவருக்கு 191 என இருந்தது. ஆனால் ஆட்டம் கைவிடப்பட்டது.

# டி20 தி என்டர்டைனர்

ஐசிசி
தர வரிசை



| அணிகள் | | |
|---|---|---|
| 1 | இந்தியா | 269 |
| 2 | ஆஸ்திரேலியா | 259 |
| 3 | இங்கிலாந்து | 254 |
| 4 | வெஸ்ட் இண்டீஸ் | 247 |
| 5 | நியூஸிலாந்து | 247 |
| 6 | தென் ஆப்பிரிக்கா | 247 |
| 7 | பாகிஸ்தான் | 236 |
| 8 | இலங்கை | 232 |
| 9 | பங்களாதேஷ் | 229 |
| 10 | ஆப்கானிஸ்தான் | 222 |

| பந்து வீச்சாளர் | | |
|---|---|---|
| அக்கேல் ஹோசைன் | வெ இ | 707 |
| வருண் சக்ரவர்த்தி | இந்தி | 706 |
| அடில் ரஷீத் | இங்கி | 705 |
| வானிந்து ஹசரங்க | இலங் | 700 |
| ஆடம் ஸாம்பா | ஆஸி | 694 |
| ரவி பிஷ்னாய் | இந்தி | 674 |
| மகீஷ் தீக்ஷானா | இலங் | 666 |
| ரஷீத்கான் | ஆப்கா | 664 |
| அர்ஸதீப் சிங் | இந்தி | 653 |
| ஜோப்ரா ஆர்ச்சர் | இங்கி | 649 |





| பேட்ஸ்மேன் | | | |
|---|---|---|---|
| 1 | டிராவிஸ் ஹெட் | ஆஸி | 856 |
| 2 | அபிஷேக் சர்மா | இந்தி | 829 |
| 3 | பில் சால்ட் | இங்கி | 815 |
| 4 | திலக் வர்மா | இந்தி | 804 |
| 5 | சூர்யகுமார் | இந்தி | 739 |
| 6 | ஜாஸ் பட்லர் | இங்கி | 735 |
| 7 | பாபர் அசாம் | பாக் | 716 |
| 8 | பதும் நிஸ்சங்க | இலங் | 714 |
| 9 | முகமது ரிஸ்வான் | பாக் | 709 |
| 10 | குஷால் பெரேரா | இலங் | 676 |
| | ரீசா ஹெண்ட்ரிக்ஸ் | தெ ஆ | 676 |

| ஆல் ரவுண்டர் | | |
|---|---|---|
| ஹர்திக் பாண்ட்யா | இந்தி | 252 |
| திபேந்திர சிங் ஏரீ | நேபாள் | 233 |
| மார்க்கஸ் ஸ்டோய்னிஸ் | ஆஸி | 210 |
| லியாம் லிவிங்ஸ்டன் | இங்கி | 209 |
| முகமது நபி | ஆப்கா | 207 |
| வானிந்து ஹசரங்க | இலங் | 205 |
| சிக்கந்தர் ரசா | ஜிம் | 194 |
| ரோமரியோ ஷெப்பர்ட் | வெ இ | 194 |
| ராஸ்டன் சேஸ் | வெ இ | 186 |
| கெர்ஹார்ட் யராஸ்மஸ் | நமி | 165 |

# <u>இங்கிலாந்தின் இந்திய சுற்றுப்பயணம்</u>

- ஞா. மைக்கேல்ராஜ்

இந்தியக் கிரிக்கெட் அணி டெஸ்ட்டில் தொடர்களை இழந்து நின்ற நிலையில், இங்கிலாந்து அணி இந்தியப் பயணம் மேற்கொண்டு 5 டி20 மற்றும் 3 ஒருநாள் போட்டிகளில் விளையாட வந்தது.

**<u>டி20 போட்டித் தொடர்:</u>**

முதல் போட்டி கொல்கத்தாவில் ஈடன் கார்டன் மைதானத்தில் நடந்தது. டாஸை வென்ற சூர்யகுமார் யாதவ் இங்கிலாந்தை பேட்டிங் செய்ய அழைத்தார். முதல் ஓவரிலேயே பிலிப் சால்ட்டைக் காலி செய்தார் அர்ஷ்தீப். அங்கே ஆரம்பித்த சரிவில் இருந்து இங்கிலாந்து மீளவில்லை. கேப்டனின் ஆட்டம் ஆடிய பட்லர் மட்டும் அரை சதம் அடித்தார். மற்றவர்கள் வருவதும் போவதுமாக இருக்க, குறைந்த ரன்களை மட்டுமே அடித்து இறுதி ஓவரின் இறுதிப் பந்தில் ஆல்அவுட் ஆகியது.

இந்தியாவின் பேட்டிங் அமர்க்களமாக ஆரம்பித்து, அபிஷேக் சர்மாவின் பிரித்து மேய்ந்த அதிரடியால் (8 சிக்ஸர்கள்), கேப்டன் சூர்யா டக்அவுட் ஆனாலும் எளிதாக வென்றது இந்தியா.

**இங்கிலாந்து**: 132 / 10 (20 ஓவர்கள்)

பட்லர் - 68 (44)

வருண் - 3 / 23

**இந்தியா**: 133 / 3 (12.5 ஓவர்கள்)

அபிஷேக் - 79 (34)

ஆர்ச்சர் - 2 / 21

**முடிவு**: *இந்தியா 7 விக்கெட்டுகள் வித்தியாசத்தில் வெற்றி* (ஆட்ட நாயகன்: வருண் சக்கரவர்த்தி)



முதல் போட்டியில் வெற்றி பெற்ற இந்தியா தெம்புடனும், தோற்ற இங்கிலாந்து வெற்றி பெறும் முனைப்புடனும் சென்னையில் வந்து ஆடின. முதலில் பேட்டிங் செய்த இங்கிலாந்து அணி நல்லதொரு ஸ்கோரை எட்டியது. இந்த முறையும் கேப்டன் பட்லர் மட்டுமே நன்றாக ஆடினார். முதல் இரண்டு விக்கெட்டுகளை ஆரம்பத்திலேயே இழந்த பிறகு மற்றவர்கள் எடுத்த சிறுசிறு ரன்களால் 165 அடித்தது இங்கிலாந்து. விழுந்த 9 விக்கெட்டுகளில் ஆறு விக்கெட்டுகளை இந்திய சுழற்பந்து வீச்சாளர்கள் எடுத்தனர்.

சேசிங் செய்த இந்திய அணிக்கு இந்த முறை ஓப்பனிங் பேட்ஸ்மேன்கள் கைகொடுக்கவில்லை. மூன்றாவது விக்கெட்டுக்குக் களமிறங்கிய திலக் வர்மா ஒரு முனையில் நிலைத்து நின்று ஆட, சுந்தரைத் தவிர மற்றவர்கள் சரியாக ஆடாவிட்டாலும் திலக் ஒற்றை ஆளாக நின்று கடைசி ஓவரில் வெற்றிபெற வைத்தார். வெற்றிக்கான ரன்னையும் அவரே அடித்தார். முதல் போட்டியைப் போல் அல்லாமல் கொஞ்சம் விறுவிறுப்பாக இந்தப் போட்டி நடந்தது கிரிக்கெட் ரசிகர்களுக்கு ஆறுதல்.

**இங்கிலாந்து:** 165 / 9 (20 ஓவர்கள்)

பட்லர் - 45 (30)

அக்சர் - 2 / 32 & வருண் - 2 / 38

**இந்தியா:** 166 / 8 (19.2  ஓவர்கள்)

திலக் - 72 (55)

சுந்தர் - 26 (19)

பிரைடன் கார்ஸ் - 3 / 29

**முடிவு:** *இந்தியா 2 விக்கெட்டுகள் வித்தியாசத்தில் வெற்றி* (ஆட்ட நாயகன்: திலக் வர்மா)



முதல் இரண்டு போட்டிகளில் தோற்றாலும் தொடரை இழந்துவிடக்கூடாது என்ற உத்வேகத்துடன் இங்கிலாந்து அணி களமிறங்கியது ராஜ்கோட்டில். டக்கெட், பட்லர் (மீண்டும்) மற்றும் லிவிங்ஸ்டன் இவர்களின் கணிசமான பங்களிப்பால் ஒரு சவாலான டார்கெட்டை இந்தியாவுக்கு வைத்தது முதல் இன்னிங்சின் முடிவில். கடைசி இரண்டு விக்கெட்டுகள் மூலம் 44 ரன்களை சேர்த்தது குறிப்பிடத்தக்கது. இந்தியாவின் வருண் சக்கரவர்த்தி 5 விக்கெட்டுகளை சாய்த்தார்.

இந்திய அணி பேட்டிங் செய்ய ஆரம்பித்ததில் இருந்து எட்டு ஓவர்கள் வரை ரன்களைக் குவித்தாலும் 4 விக்கெட்டுகளை இழந்தது. குறிப்பிட்ட இடைவெளியில் விக்கெட்டுகளை இழந்தாலும் ஹர்திக் பாண்டியா இருந்தவரை வெற்றி பெற வாய்ப்பு இருந்தது. அவர் வெளியேறியதும் இந்திய அணியின் வெற்றியும் வெளியேறியது. இங்கிலாந்தின் வேகப்பந்து வீச்சாளர்கள் விக்கெட்டுகளை அள்ளினார்கள். முதல் இன்னிங்சில் வருண் எடுத்த 5 விக்கெட்டுகள் இந்தியாவின் வெற்றிக்கு உதவவில்லை.

**இங்கிலாந்து:** 171 / 9 (20 ஓவர்கள்)

டக்கெட் - 51 (28)

லிவிங்ஸ்டன் - 43 (24)

வருண் - 5 / 24

**இந்தியா:** 145 / 9 (20 ஓவர்கள்)

ஹர்திக் - 40 (35)

ஓவர்டன் - 3 / 24

**முடிவு:** *இங்கிலாந்து 26 ரன்கள் வித்தியாசத்தில் வெற்றி* (ஆட்ட நாயகன்: வருண் சக்கரவர்த்தி)

நான்காவது போட்டி புனேவில் நடந்தது. இந்திய அணியில் ஷிவம் துபே களம் கண்டார் இந்தப் போட்டியில். வாய்ப்பு கிடைத்த போட்டியில் நல்லதொரு பங்களிப்பையும் கொடுத்தார் துபே. முதலில் பேட்டிங் செய்த இந்திய அணி துபே மற்றும் ஹர்திக் அரை சதங்களால் தொடரின் அதிகபட்ச ரன்களை அடித்தது. அபிஷேக் மற்றும் ரிங்கு சிங்கும் பேட்டிங்கில் ரன்களை அணிக்கு அளித்தனர். இங்கிலாந்து பவுலர்கள் அனைவருமே 8 ரன் ரேட்டுக்கு மேலே கொடுத்தனர். ஷகிப் மஹ்மூத் 3 விக்கெட்டுகளை எடுத்தார்.

சேஸிங்கில் இங்கிலாந்தின் துவக்க பேட்ஸ்மேன்கள் நன்றாக ஆடினார்கள். ஆறாவது ஓவரின் முடிவில் தான் முதல் விக்கெட் விழுந்தது அதற்குள் 62 ரன்களை அடித்திருந்தனர். ஆனால் அதற்குப் பிறகு ஹேரி புரூக் தவிர்த்து மற்றவர்கள் வருவதும் போவதுமாக இருக்க, தொடர்ந்து விக்கெட்டுகளை இழந்துகொண்டே இருந்தது இங்கிலாந்து, தோற்றும் போனது. பிஷ்னாய் மற்றும் ஹர்ஷித் ராணா தலா 3 விக்கெட்டுகளை எடுத்தார்கள்.

**இந்தியா**: 181 / 9 (20 ஓவர்கள்)

ஹர்திக் - 53 (30)

துபே - 53 (34)

மஹ்மூத் - 3 / 35

**இங்கிலாந்து**: 166 / 10 (19.4 ஓவர்கள்)

புரூக் - 51 (26)

பிஷ்னாய் - 3 / 28

ராணா - 3 / 33

**முடிவு**: *இந்தியா 15 ரன்கள் வித்தியாசத்தில் வெற்றி* (ஆட்ட நாயகன்: ஷிவம் துபே)



ஏற்கனவே தொடரை வென்றுவிட்டதால் இந்தியா சில சோதனை முயற்சிகளை செய்யலாம் என எதிர்பார்த்தபோது கொஞ்சமும் வேகத்தைக் குறைக்காமல் கடைசிப் போட்டியில் மும்பை வான்கடேவில் ஆடியது இந்தியா. முதலில் பேட்டிங் செய்த இந்திய அணியின் அபிஷேக் ஷர்மா சூறாவளி ஆட்டம் ஆடி தனது சதத்தை அடித்தார். இரண்டாவது விக்கெட் இணை அடித்தது 115 ரன்கள், ஆனால் அதில் உடன் இருந்த திலக் வர்மா அடித்தது வெறும் 24 ரன்கள் மட்டும் தான். துபேவும் தன் பங்குக்கு மட்டையைச் சுழற்ற 248 என்ற இமாலய இலக்கை நிர்ணயித்தது இங்கிலாந்துக்கு. பெரிதும் எதிர்பார்க்கப்பட்ட ஆர்ச்சர் தனது பவுலிங்கில் 50 அடித்தார்.

சேஸிங்கில் பெரிய பேட்டிங் நபர்களைக் கொண்ட இங்கிலாந்து வெறும் 97 ரன்களுக்கு சுருண்டு தோல்வியைத் தழுவியது. அவ்வளவு பெரிய ரன்களை சேஸ் செய்யும்போது பார்ட்னர்ஷிப்கள் மிக அவசியம். ஆனால் இங்கிலாந்தால் ஒரு பார்ட்னர்ஷிப்பைக் கூட கொடுக்க முடியவில்லை. அடித்த 97 ரன்களில், பிலிப் சால்ட் அடித்தது மட்டுமே 55 ரன்கள். இம்முறை சுழற்பந்து வீச்சாளர்கள் மட்டும் அல்லாமல் இந்தியாவின் ஷமி யும் 3 விக்கெட்டுகளை எடுத்தார். பேட்டிங்கில் கலக்கிய அபிஷேக் தன்னுடைய ஒரே ஓவரில் 2 விக்கெட்டுகளையும் வீழ்த்தினார்.

**இந்தியா**: 247 / 9 (20 ஓவர்கள்)

அபிஷேக் - 135 (54)

பிரைடன் கார்ஸ் - 3 / 38

**இங்கிலாந்து**: 97 / 10 (10.3 ஓவர்கள்)

சால்ட் - 55 (23)

ஷமி - 3 / 25

**முடிவு**: *இந்தியா 150 ரன்கள் வித்தியாசத்தில் வெற்றி* (ஆட்ட நாயகன்: அபிஷேக் சர்மா)

***தொடர் முடிவு: இந்தியா 4-1 வெற்றி (தொடர் நாயகன்: வருண் சக்கரவர்த்தி)***

**ஒருநாள் போட்டித் தொடர்:**

முதல் ஒருநாள் போட்டி நாக்பூரில் விதர்பா கிரிக்கெட் மைதானத்தில் நடந்தது. இங்கிலாந்து முதலில் பேட்டிங் செய்தது. நல்லதொரு ஓப்பனிங் பார்ட்னர்ஷிப் அமைந்தது இங்கிலாந்துக்கு. அதிலும் சால்ட் அதிரடியாக டி20 மோடில் ஆடினார். ரன்னவுட்டால் இந்த ஜோடி பிரிந்தது. ரூட்டும் புரூக்கும் ஏமாற்றினாலும் பட்லர் மற்றும் பெத்தேல் இவர்களின் பங்களிப்பால் நல்ல நிலையில் சென்றாலும் அதன்பின் வந்தவர்கள் சொதப்ப ஓரளவுக்கு சவாலான டார்கெட்டை இந்தியாவுக்கு நிர்ணயித்தது. ராணாவும் ஜடேஜாவும் தலா 3 விக்கெட்டுகளை வீழ்த்தினர். அதிலும் ஜடேஜா மிகச் சிக்கனமான பந்துவீச்சால் ரன்களைக் கட்டுப்படுத்தினார்.

இந்திய அணியின் தொடக்க இணை ஏமாற்றியது 19 / 2. கில் ஒருமுனையில் நங்கூரம் போட்டு ஆட, ஷ்ரேயாஸ் நல்லதொரு பார்ட்னர்ஷிப் கொடுத்து அவர் பங்குக்கு அரை சதம் அடித்து அவுட் ஆனார். அடுத்து பேட்டிங் ஆர்டரில் ப்ரோமோஷன் வாங்கி வந்த அக்சர் பட்டேல் தனது அரை சதத்தை அடித்தார். வெற்றி பெற வேண்டிய நேரத்தில் கில் அவுட் ஆக, பாண்ட்யாவும் ஜடேஜாவும் முடித்து வைத்தனர். இங்கிலாந்து தனது 7 பவுலர்களைப் பயன்படுத்தியும் இந்தியாவின் வெற்றியைத் தடுக்க முடியவில்லை. மஹ்மூத் மற்றும் ரஷீத் தலா 2 விக்கெட்டுகளை வீழ்த்தினார்கள்.

**இங்கிலாந்து**: 248 / 10 (47.4 ஓவர்கள்)

பட்லர் - 52

பெத்தேல் - 51

ஜடேஜா - 3 / 26

ராணா - 3 / 53

**இந்தியா**: 251 / 6 (38.4 ஓவர்கள்)

கில் - 87

ஷ்ரேயஸ் - 59

அக்சர் - 52

மஹ்மூத் - 2 / 47

**முடிவு**: *இந்தியா 4 விக்கெட்டுகள் வித்தியாசத்தில் வெற்றி* (ஆட்ட நாயகன்: கில்)

இரண்டாவது போட்டி கட்டாக்கில் நடந்தது. முதல் போட்டியைப் போலவே இதிலும் இங்கிலாந்து முதலில் பேட்டிங் செய்து, நல்லதொரு ஓப்பனிங் பார்ட்னர்ஷிப் அமைந்தது. முதல் ஆறு வரிசைகளில் பேட்ஸ்மேன்கள் தங்களது சிறப்பான பங்களிப்பை அளித்தனர். இறுதி ஓவர்களிலும் நன்கு ஆடி சவாலான டார்கெட்டை இந்தியாக்கு நிர்ணயித்தது. இந்திய வேகப்பந்து வீச்சாளர்களின் பந்துவீச்சை நொறுக்கிய இங்கிலாந்து அணி, சுழற்பந்தை அந்த அளவுக்கு ரன் சேகரிப்பிற்குப் பயன்படுத்திக் கொள்ளவில்லை. இல்லையென்றால் இன்னும் அதிகமான டார்கெட்டை இந்தியாவுக்கு அளித்திருக்க முடியும். ஜடேஜா 3 விக்கெட்டுகளை வீழ்த்தினார்.

சேஸிங்கைத் துவக்கிய இந்திய அணியில் ஓப்பனிங் பேட்ஸ்மேன்கள் ஒரு தரமான பார்ட்னர்ஷிப்பைத் தந்தனர். 17 வது ஓவரில் தான் ரோஹித் மற்றும் கில் ஜோடி பிரிந்தது. ஆனால் அதற்குள் 136 ரன்களை அடித்திருந்தது. ரோஹித் தொடர்ந்து ஆடி சதம் அடித்தார். அடுத்து வந்த விராட் ஏமாற்றினாலும் ஷ்ரேயாஸ் மற்றும் அக்சர் கூட்டணி வெற்றியின் விளிம்பு வரை எடுத்துச் சென்றது. அக்சர் இறுதி வரை நின்று கலக்க, இந்திய அணி 45 வது ஓவரிலேயே 308 ரன்கள் குவித்து வெற்றி பெற்றது. தொடரையும் கைப்பற்றியது.

**இங்கிலாந்து**: 304 / 10 (49.5 ஓவர்கள்)

ரூட் - 69

டக்கட் - 65

ஜடேஜா - 3 / 35

**இந்தியா**: 308 / 6 (44.3 ஓவர்கள்)

ரோஹித் - 119

கில் - 60

ஓவர்டன் - 2 / 27

**முடிவு**: *இந்தியா 4 விக்கெட்டுகள் வித்தியாசத்தில் வெற்றி* (ஆட்ட நாயகன்: ரோஹித் சர்மா)



அகமதாபாத்தில் மூன்றாவது போட்டி நடைபெற்றது. தொடரை ஏற்கனவே இந்தியா வென்றிருந்தாலும், இந்தப் போட்டியிலும் இந்தியா ஆதிக்கம் செலுத்தியது. சென்ற போட்டியில் ரோஹித் சதம் அடித்ததை ஈடு செய்ய இந்த முறை சுப்மன் கில் சதம் அடித்தார். அடுத்தடுத்து வந்த விராட், ஷ்ரேயாஸ், ராகுல் என அனைவரும் தாக்குதல் நடத்த, பின்னர் வந்த பேட்ஸ்மேன்களும் கணிசமான பங்களிப்பு அளிக்க இந்தியா 356 ரன்களைக் குவித்தது. விக்கெட் எடுப்பதில் இங்கிலாந்தின் அடில் ரஷீத் முன்னணியில் (4 விக்கெட்டுகள்) இருந்தாலும், அனைத்துப் பவுலர்களையும் இந்திய பேட்ஸ்மேன்கள் பதம் பார்த்தனர்.

தொடரை ஏற்கனவே இழந்துவிட்டதாலோ என்னவோ அனைத்து இங்கிலாந்து பேட்ஸ்மேன்களும் முடிந்தவரை அடித்து ஆடினர். பவர்பிளேயில் மட்டும் 84 ரன்களை அடித்தனர். அதனால் விக்கெட் போவதைப் பற்றிய கவலை இல்லாமல் ஆடி 35 வது ஓவரிலேயே அனைத்து விக்கெட்டுகளையும் இழந்து தோற்றுப் போனது இங்கிலாந்து. ஒருவரும் அரை சதம் கூட அடிக்கவில்லை. இந்திய பவுலிங்கைப் பொறுத்தவரை பந்துவீசிய ஆறு பவுலர்களும் விக்கெட் எடுத்தனர்.

**இந்தியா**: 356 / 10 (50 ஓவர்கள்)

கில் - 112

ஷ்ரேயாஸ் - 78

அடில் ரஷீத் - 4 / 64

**இங்கிலாந்து**: 214 / 10 (34.2 ஓவர்கள்)

அட்கின்சன் - 38

பேன்டன் - 38

அக்சர் - 2 / 22

**முடிவு**: *இந்தியா 142 ரன்கள் வித்தியாசத்தில் வெற்றி* (ஆட்ட நாயகன்: சுப்மன் கில்)

***தொடர் முடிவு: 3-0 கணக்கில் இந்தியா வெற்றி (தொடர் நாயகன்: சுப்மன் கில்)***

**மொத்தத்தில் இந்தத் தொடரில் இங்கிலாந்து பேட்ஸ்மேன்கள் இன்னும் சிறப்பாக செயல்பட்டிருக்க வேண்டும் என்பது தான் தோன்றுகிறது. நல்ல பார்ட்னர்ஷிப்கள் அமையாமை, தொடக்கம் நன்றாக அமைந்தும் அடுத்து வந்த பேட்ஸ்மேன்கள் அதைப் பயன்படுத்திக் கொள்ளாமை எனத் தோல்விக்குக் காரணங்கள் சொல்லலாம். இந்தப் பிரச்சனை நடந்து கொண்டிருக்கும் சாம்பியன்ஷிப் தொடரிலும் எதிரொலிக்கிறது எனலாம்.**

# டெஸ்ட் தி பெஸ்ட்

ஐசிசி
தர வரிசை



| அணிகள் | | |
|---|---|---|
| 1 | ஆஸ்திரேலியா | 127 |
| 2 | தென் ஆப்பிரிக்கா | 112 |
| 3 | இந்தியா | 109 |
| 4 | இங்கிலாந்து | 105 |
| 5 | நியூஸிலாந்து | 97 |
| 6 | இலங்கை | 86 |
| 7 | பாகிஸ்தான் | 82 |
| 8 | வெஸ்ட் இண்டீஸ் | 76 |
| 9 | பங்களாதேஷ் | 65 |
| 10 | அயர்லாந்து | 30 |

| பந்து வீச்சாளர் | | |
|---|---|---|
| ஜஸ்பிரிட் பும்ரா | இந்தி | 908 |
| ககிஸோ ரபாடா | தெ ஆ | 837 |
| பாட் கம்மின்ஸ் | ஆஸி | 824 |
| ஜோஷ் ஹசல்வுட் | ஆஸி | 818 |
| நாதன் லைன் | ஆஸி | 812 |
| நோமன் அலி | பாக் | 806 |
| மார்கோ யென்சென் | தெ ஆ | 785 |
| மாட் ஹென்றி | நியூஸி | 782 |
| பிரபாத் ஜெயசூர்யா | இலங் | 751 |
| ரவிந்திர ஜடேஜா | இந்தி | 745 |





| பேட்ஸ்மேன் | | | |
|---|---|---|---|
| 1 | ஜோ ரூட் | இங்கி | 895 |
| 2 | ஹாரி புரூக் | இங்கி | 876 |
| 3 | கேன் வில்லியம்சன் | நியூஸி | 867 |
| 4 | யெஜெஸ்வி ஜெய்ஸ்வால் | இந்தி | 847 |
| 5 | ஸ்டீவன் ஸ்மித் | ஆஸி | 823 |
| 6 | டெம்பா பவுமா | தெ ஆ | 769 |
| 7 | கமிந்து மெண்டிஸ் | இலங் | 761 |
| 8 | ஸ்டீவன் ஸ்மித் | ஆஸி | 748 |
| 9 | உஸ்மான் கவாஜா | ஆஸி | 739 |
| 10 | ரிசப் பண்ட் | இந்தி | 739 |
| | சவுத் ஷகீல் | பாக் | 739 |

| ஆல் ரவுண்டர் | | |
|---|---|---|
| ரவிந்திர ஜடேஜா | இந்தி | 400 |
| மார்கோ யென்சென் | தெ ஆ | 294 |
| மெஹிதி ஹசன் | பங்க | 284 |
| பாட் கம்மின்ஸ் | ஆஸி | 271 |
| ஷகீப் அல் ஹசன் | பங்க | 263 |
| ஜேசன் ஹோல்டர் | வெ இ | 249 |
| ஜோ ரூட் | இங்கி | 247 |
| கஸ் அட்கின்சன் | இங்கி | 240 |
| பென் ஸ்டோக்ஸ் | இங்கி | 235 |
| கிறிஸ் ஒக்ஸ் | இங்கி | 225 |

# இம்பாக்ட் ப்ளேயர்

விஜய் பரத்வாஜ் என்றதும் 90களில் கிரிக்கெட் பார்த்தவர்கள் அனைவரின் மனதில் அந்தக் கண்ணாடி போட்ட முகம் வரும். கூலிங் கிளாஸ் போட்டு விளையாடுபவர்கள் மத்தியில் பவர் கிளாஸ் போட்டு விளையாடிய வீரர்கள் ஒரு சிலரே.

ஜிம்பாப்வே அணியில் ஜான் ரென்னி, நியூசிலாந்து அணியில் டேனியல் வெட்டோரி என ஒரு சிலரே மூக்குக் கண்ணாடி அணிந்து விளையாடிய வீரர்கள். (க்ளைவ் லாயிட் முந்தைய காலகட்டத்தைச் சார்ந்தவர்). அந்த நேரத்தில் தான் இந்திய அணிக்கு மூக்குக் கண்ணாடி அணிந்து விளையாடும் ஒருவர் வந்தார், அவர் தான் விஜய் பரத்வாஜ்.



கர்நாடக மாநிலத்தைச் சேர்ந்த விஜய் பரத்வாஜ் ரஞ்சிப் போட்டியில் ஒரு சீசனில் 1000 ரன்களுக்கு அதிகமாக அடித்ததால் இந்திய அணிக்குத் தேர்வானார்.

1999 உலகக் கோப்பைக்குப் பிறகு இந்திய அணி கென்யாவிற்கு சென்று எல்ஜி கோப்பையில் ஆடியது. அந்தத் தொடரின் முதல் போட்டியில் தென்னாப்பிரிக்கா அணிக்கு எதிராக அறிமுகமான பரத்வாஜ் 10 ஓவர்கள் பந்துவீசி 3 மெய்டன்களுடன் 16 ரன்கள் கொடுத்து 1 விக்கெட்டை வீழ்த்தினார். ஆம், அன்றைய தேதியில் அறிமுகப் போட்டியிலேயே பகுதி நேரப் பந்துவீச்சாளருக்கு வாய்ப்புக் கொடுக்கும் வழக்கம் இருந்தது.

அந்தத் தொடரில் சிறப்பாகப் பந்து வீசினார் பரத்வாஜ். தனது ஆஃப் ஸ்பின் மூலம் பத்து விக்கெட்டுகளை வீழ்த்தினார். பேட்டிங்கில் மொத்தமாக 89 ரன்கள் அடித்தார். அந்தத் தொடரை இந்தியா தோற்றாலும் தொடர் நாயகன் ஆனார் விஜய் பரத்வாஜ்.

அதற்குப் பிறகு சச்சின் தலைமையிலான அணியில் நியூசிலாந்துக்கு எதிரான டெஸ்ட் மற்றும் ஒருநாள் தொடருக்குத் தேர்வானார். பெரிய அளவில் சாதிக்கவில்லை. அடுத்த ஆஸ்திரேலியத் தொடருக்கும் தேர்வானார். போட்டியின் போது ஏற்பட்ட காயத்தால் இரண்டாவது இன்னிங்ஸில் பேட்டிங் செய்யவில்லை. அதற்குப் பிறகு அணிக்குத் திரும்பவும் முடியவில்லை.

யுவராஜ், தினேஷ் மோங்கியா, முகமது கைஃப் ஆகியோர் அணிக்கு வந்ததால் இவருக்கான இடம் பறிபோனது. கடைசியாக 2002ல் ஜிம்பாப்வே அணியுடனான ஒருநாள் போட்டியில் ஆடினார்.

2006ல் ஓய்வு பெற்றுவிட்ட விஜய் பரத்வாஜ் வர்னணையாளர் மற்றும் பயிற்சியாளராகப் பணிபுரிந்து வருகிறார். கன்னட மொழி வர்னணையாளராக பிரபலத் தொலைக்காட்சிகளில் பணியாற்றுகிறார். பெங்களூரு தேசியக் கிரிக்கெட் அகாடமியில் பயிற்சியாளருக்கான லெவல் 3 சான்றிதழ் பெற்றவர் விஜய் பரத்வாஜ்.

பரத்வாஜ் 1996, 1998, 1999, 2002 ரஞ்சிப் போட்டி வென்ற அணியில் அங்கம் வகித்தவர். 1996, 1998 இராணிக் கோப்பை வென்ற அணியிலும் அங்கம் வகித்தவர். முதல்தரக் கிரிக்கெட்டில் 5553 ரன்களைக் குவித்துள்ளார். 59 விக்கெட்டுகளையும் வீழ்த்தியுள்ளார்.

2016-ம் ஆண்டில் ஓமன் அணிக்கு பீல்டிங் பயிற்சியாளராகப் பணியாற்றினார் பரத்வாஜ். முதல் மூன்று சீசன்களில் ராயல் சேலஞ்சர்ஸ் பெங்களூரு அணியில் பணியாற்றினார். தற்போது டெல்லி கேப்பிட்டல்ஸ் அணியில் பணிபுரிந்து வருகிறார்.




10 ஒருநாள் போட்டிகள் மற்றும் 3 டெஸ்ட் போட்டிகள் எனக் குறுகிய காலமே சர்வதேசப் போட்டிகளில் ஆடியிருந்தாலும் ரசிகர்கள் மனதில் நீங்கா இடம் பெற்றவர் விஜய் பரத்வாஜ்.

## ஐபிஎல் அட்டவணை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1 | 23- மார்ச் | ஞாயிறு | மும்பை இந்தியன்ஸ் | சென்னை | 7.30 |
| 2 | 28- மார்ச் | வெள்ளி | ராயல் சேலஞ்சர்ஸ் பெங்களூரு | சென்னை | 7.30 |
| 3 | 30- மார்ச் | ஞாயிறு | ராஜஸ்தான் ராயல்ஸ் | குவஹாத்தி | 7.30 |
| *4* | *5- ஏப்ரல்* | *சனி* | *டெல்லி கேப்பிட்டல்ஸ்* | *சென்னை* | *3.30* |
| 5 | 8- ஏப்ரல் | செவ்வாய் | பஞ்சாப் கிங்ஸ் | முல்லான்பூர் | 7.30 |
| 6 | 11- ஏப்ரல் | வெள்ளி | கொல்கத்தா நைட்ரைடர்ஸ் | சென்னை | 7.30 |
| 7 | 14- ஏப்ரல் | திங்கள் | லக்னோ சூப்பர் ஜெயின்ட்ஸ் | லக்னோ | 7.30 |
| 8 | 20- ஏப்ரல் | ஞாயிறு | மும்பை இந்தியன்ஸ் | மும்பை | 7.30 |
| 9 | 25- ஏப்ரல் | வெள்ளி | சன்ரைசர்ஸ் ஹைதராபாத் | சென்னை | 7.30 |
| 10 | 30- ஏப்ரல் | புதன் | பஞ்சாப் கிங்ஸ் | சென்னை | 7.30 |
| 11 | 3 - மே | சனி | ராயல் சேலஞ்சர்ஸ் பெங்களூரு | பெங்களூரு | 7.30 |
| 12 | 7 - மே | புதன் | கொல்கத்தா நைட்ரைடர்ஸ் | கொல்கத்தா | 7.30 |
| 13 | 12 - மே | திங்கள் | ராஜஸ்தான் ராயல்ஸ் | சென்னை | 7.30 |
| *14* | *18 - மே* | *ஞாயிறு* | *குஜராத் டைட்டன்ஸ்* | *அகமதாபாத்* | *3.30* |


கேப்டன்


எதிர்பார்ப்பு


பழைய பன்னீர்செல்வம்

# சென்னை சூப்பர் கிங்ஸ்

## ஐபிஎல் அட்டவணை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1 | 24- மார்ச் | திங்கள் | லக்னோ சூப்பர் ஜெயின்ட்ஸ் | விசாகப்பட்டினம் | 7.30 |
| *2* | *30- மார்ச்* | *ஞாயிறு* | *சன்ரைசர்ஸ் ஹைதராபாத்* | *விசாகப்பட்டினம்* | *3.30* |
| *3* | *5- ஏப்ரல்* | *சனி* | *சென்னை சூப்பர் கிங்ஸ்* | *சென்னை* | *3.30* |
| 4 | 10- ஏப்ரல் | வியாழன் | ராயல் சேலஞ்சர்ஸ் பெங்களூரு | பெங்களூரு | 7.30 |
| 5 | 13- ஏப்ரல் | ஞாயிறு | மும்பை இந்தியன்ஸ் | டெல்லி | 7.30 |
| 6 | 16- ஏப்ரல் | புதன் | ராஜஸ்தான் ராயல்ஸ் | டெல்லி | 7.30 |
| *7* | *19- ஏப்ரல்* | *சனி* | *குஜராத் டைட்டன்ஸ்* | *அகமதாபாத்* | *3.30* |
| 8 | 22- ஏப்ரல் | செவ்வாய் | லக்னோ சூப்பர் ஜெயின்ட்ஸ் | லக்னோ | 7.30 |
| 9 | 27- ஏப்ரல் | ஞாயிறு | ராயல் சேலஞ்சர்ஸ் பெங்களூரு | டெல்லி | 7.30 |
| 10 | 29- ஏப்ரல் | செவ்வாய் | கொல்கத்தா நைட்ரைடர்ஸ் | டெல்லி | 7.30 |
| 11 | 5 - மே | திங்கள் | சன்ரைசர்ஸ் ஹைதராபாத் | ஹைதராபாத் | 7.30 |
| 12 | 8 - மே | வியாழன் | பஞ்சாப் கிங்ஸ் | தரம்சாலா | 7.30 |
| 13 | 11 - மே | ஞாயிறு | குஜராத் டைட்டன்ஸ் | டெல்லி | 7.30 |
| 14 | 15 - மே | வியாழன் | மும்பை இந்தியன்ஸ் | மும்பை | 7.30 |



கேப்டன்



எதிர்பார்ப்பு



பெரிய இடம்

# டெல்லி கேப்பிட்டல்ஸ்

## ஐபிஎல் அட்டவணை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1 | 25- மார்ச் | செவ்வாய் | பஞ்சாப் கிங்ஸ் | அகமதாபாத் | 7.30 |
| 2 | 29- மார்ச் | சனி | மும்பை இந்தியன்ஸ் | அகமதாபாத் | 7.30 |
| 3 | 2- ஏப்ரல் | புதன் | ராயல் சேலஞ்சர்ஸ் பெங்களூரு | பெங்களூரு | 7.30 |
| 4 | 6- ஏப்ரல் | ஞாயிறு | சன்ரைசர்ஸ் ஹைதராபாத் | ஹைதராபாத் | 7.30 |
| 5 | 9- ஏப்ரல் | புதன் | ராஜஸ்தான் ராயல்ஸ் | அகமதாபாத் | 7.30 |
| *6* | *12- ஏப்ரல்* | *சனி* | *லக்னோ சூப்பர் ஜெயின்ட்ஸ்* | *லக்னோ* | *3.30* |
| *7* | *19- ஏப்ரல்* | *சனி* | *டெல்லி கேப்பிட்டல்ஸ்* | *அகமதாபாத்* | *3.30* |
| 8 | 21- ஏப்ரல் | திங்கள் | கொல்கத்தா நைட்ரைடர்ஸ் | கொல்கத்தா | 7.30 |
| 9 | 28- ஏப்ரல் | திங்கள் | ராஜஸ்தான் ராயல்ஸ் | ஜெய்ப்பூர் | 7.30 |
| 10 | 2 - மே | வெள்ளி | சன்ரைசர்ஸ் ஹைதராபாத் | அகமதாபாத் | 7.30 |
| 11 | 6 - மே | செவ்வாய் | மும்பை இந்தியன்ஸ் | மும்பை | 7.30 |
| 12 | 11 - மே | ஞாயிறு | டெல்லி கேப்பிட்டல்ஸ் | டெல்லி | 7.30 |
| 13 | 14 - மே | புதன் | லக்னோ சூப்பர் ஜெயின்ட்ஸ் | அகமதாபாத் | 7.30 |
| *14* | *18 - மே* | *ஞாயிறு* | *சென்னை சூப்பர் கிங்ஸ்* | *அகமதாபாத்* | *3.30* |



கேப்டன்



எதிர்பார்ப்பு



பெரிய இடம்

# குஜராத் டைட்டன்ஸ்

## ஐபிஎல் அட்டவணை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1 | 24- மார்ச் | திங்கள் | டெல்லி கேப்பிட்டல்ஸ் | விசாகப்பட்டினம் | 7.30 |
| 2 | 27- மார்ச் | வியாழன் | சன்ரைசர்ஸ் ஹைதராபாத் | ஹைதராபாத் | 7.30 |
| 3 | 1- ஏப்ரல் | செவ்வாய் | பஞ்சாப் கிங்ஸ் | லக்னோ | 7.30 |
| 4 | 4- ஏப்ரல் | வெள்ளி | மும்பை இந்தியன்ஸ் | லக்னோ | 7.30 |
| *5* | *6- ஏப்ரல்* | *ஞாயிறு* | *கொல்கத்தா நைட்ரைடர்ஸ்* | *கொல்கத்தா* | *3.30* |
| *6* | *12- ஏப்ரல்* | *சனி* | *குஜராத் டைட்டன்ஸ்* | *லக்னோ* | *3.30* |
| 7 | 14- ஏப்ரல் | திங்கள் | சென்னை சூப்பர் கிங்ஸ் | லக்னோ | 7.30 |
| 8 | 19- ஏப்ரல் | சனி | ராஜஸ்தான் ராயல்ஸ் | ஜெய்ப்பூர் | 7.30 |
| 9 | 22- ஏப்ரல் | செவ்வாய் | டெல்லி கேப்பிட்டல்ஸ் | லக்னோ | 7.30 |
| *10* | *27- ஏப்ரல்* | *ஞாயிறு* | *மும்பை இந்தியன்ஸ்* | *மும்பை* | *3.30* |
| 11 | 4 - மே | ஞாயிறு | பஞ்சாப் கிங்ஸ் | தரம்சாலா | 7.30 |
| 12 | 9 - மே | வெள்ளி | ராயல் சேலஞ்சர்ஸ் பெங்களூரு | லக்னோ | 7.30 |
| 13 | 14 - மே | புதன் | குஜராத் டைட்டன்ஸ் | அகமதாபாத் | 7.30 |
| 14 | 18 - மே | ஞாயிறு | சன்ரைசர்ஸ் ஹைதராபாத் | லக்னோ | 7.30 |



கேப்டன்



எதிர்பார்ப்பு



பெரிய இடம்

# லக்னோ சூப்பர் ஜெயின்ட்ஸ்

## ஐபிஎல் அட்டவணை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1 | 23- மார்ச் | ஞாயிறு | சென்னை சூப்பர் கிங்ஸ் | சென்னை | 7.30 |
| 2 | 29- மார்ச் | சனி | குஜராத் டைட்டன்ஸ் | அகமதாபாத் | 7.30 |
| 3 | 31- மார்ச் | திங்கள் | கொல்கத்தா நைட்ரைடர்ஸ் | மும்பை | 7.30 |
| 4 | 4- ஏப்ரல் | வெள்ளி | லக்னோ சூப்பர் ஜெயின்ட்ஸ் | லக்னோ | 7.30 |
| 5 | 7- ஏப்ரல் | திங்கள் | ராயல் சேலஞ்சர்ஸ் பெங்களூரு | மும்பை | 7.30 |
| 6 | 13- ஏப்ரல் | ஞாயிறு | டெல்லி கேப்பிட்டல்ஸ் | டெல்லி | 7.30 |
| 7 | 17- ஏப்ரல் | வியாழன் | சன்ரைசர்ஸ் ஹைதராபாத் | மும்பை | 7.30 |
| 8 | 20- ஏப்ரல் | ஞாயிறு | சென்னை சூப்பர் கிங்ஸ் | மும்பை | 7.30 |
| 9 | 23- ஏப்ரல் | புதன் | சன்ரைசர்ஸ் ஹைதராபாத் | ஹைதராபாத் | 7.30 |
| *10* | *27- ஏப்ரல்* | *ஞாயிறு* | *லக்னோ சூப்பர் ஜெயின்ட்ஸ்* | *மும்பை* | *3.30* |
| 11 | 1 - மே | வியாழன் | ராஜஸ்தான் ராயல்ஸ் | ஜெய்ப்பூர் | 7.30 |
| 12 | 6 - மே | செவ்வாய் | குஜராத் டைட்டன்ஸ் | மும்பை | 7.30 |
| *13* | *11 - மே* | *ஞாயிறு* | *பஞ்சாப் கிங்ஸ்* | *தரம்சாலா* | *3.30* |
| 14 | 15 - மே | வியாழன் | டெல்லி கேப்பிட்டல்ஸ் | மும்பை | 7.00 |



கேப்டன்



எதிர்பார்ப்பு



பழைய பன்னீர்செல்வம்

# மும்பை இந்தியன்ஸ்

ஐபிஎல் அட்டவணை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1 | 22- மார்ச் | சனி | ராயல் சேலஞ்சர்ஸ் பெங்களூரு | கொல்கத்தா | 7.30 |
| 2 | 26- மார்ச் | புதன் | ராஜஸ்தான் ராயல்ஸ் | குவஹாத்தி | 7.30 |
| 3 | 31- மார்ச் | திங்கள் | மும்பை இந்தியன்ஸ் | மும்பை | 7.30 |
| 4 | 3- ஏப்ரல் | வியாழன் | சன்ரைசர்ஸ் ஹைதராபாத் | கொல்கத்தா | 7.30 |
| *5* | *6- ஏப்ரல்* | *ஞாயிறு* | *லக்னோ சூப்பர் ஜெயின்ட்ஸ்* | *கொல்கத்தா* | *3.30* |
| 6 | 11- ஏப்ரல் | வெள்ளி | சென்னை சூப்பர் கிங்ஸ் | சென்னை | 7.30 |
| 7 | 15- ஏப்ரல் | செவ்வாய் | பஞ்சாப் கிங்ஸ் | முல்லான்பூர் | 7.30 |
| 8 | 21- ஏப்ரல் | திங்கள் | குஜராத் டைட்டன்ஸ் | கொல்கத்தா | 7.30 |
| 9 | 26- ஏப்ரல் | சனி | பஞ்சாப் கிங்ஸ் | கொல்கத்தா | 7.30 |
| 10 | 29- ஏப்ரல் | செவ்வாய் | டெல்லி கேப்பிட்டல்ஸ் | டெல்லி | 7.30 |
| *11* | *4 - மே* | *ஞாயிறு* | *ராஜஸ்தான் ராயல்ஸ்* | *கொல்கத்தா* | *3.30* |
| 12 | 7 - மே | புதன் | சென்னை சூப்பர் கிங்ஸ் | கொல்கத்தா | 7.30 |
| 13 | 10 - மே | சனி | சன்ரைசர்ஸ் ஹைதராபாத் | ஹைதராபாத் | 7.30 |
| 14 | 17 - மே | சனி | ராயல் சேலஞ்சர்ஸ் பெங்களூரு | பெங்களூரு | 7.30 |


கேப்டன்


எதிர்பார்ப்பு


பெரிய இடம்

# கொல்கத்தா நைட்ரைடர்ஸ்

## ஐபிஎல் அட்டவணை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1 | 25- மார்ச் | செவ்வாய் | குஜராத் டைட்டன்ஸ் | அகமதாபாத் | 7.30 |
| 2 | 1- ஏப்ரல் | செவ்வாய் | லக்னோ சூப்பர் ஜெயின்ட்ஸ் | லக்னோ | 7.30 |
| 3 | 5- ஏப்ரல் | சனி | ராஜஸ்தான் ராயல்ஸ் | முல்லான்பூர் | 7.30 |
| 4 | 8- ஏப்ரல் | செவ்வாய் | சென்னை சூப்பர் கிங்ஸ் | முல்லான்பூர் | 7.30 |
| 5 | 12- ஏப்ரல் | சனி | சன்ரைசர்ஸ் ஹைதராபாத் | ஹைதராபாத் | 7.30 |
| 6 | 15- ஏப்ரல் | செவ்வாய் | கொல்கத்தா நைட்ரைடர்ஸ் | முல்லான்பூர் | 7.30 |
| 7 | 18- ஏப்ரல் | வெள்ளி | ராயல் சேலஞ்சர்ஸ் பெங்களூரு | பெங்களூரு | 7.30 |
| *8* | *20- ஏப்ரல்* | *ஞாயிறு* | *ராயல் சேலஞ்சர்ஸ் பெங்களூரு* | *முல்லான்பூர்* | *3.30* |
| 9 | 26- ஏப்ரல் | சனி | கொல்கத்தா நைட்ரைடர்ஸ் | கொல்கத்தா | 7.30 |
| 10 | 30- ஏப்ரல் | புதன் | சென்னை சூப்பர் கிங்ஸ் | சென்னை | 7.30 |
| 11 | 4 - மே | ஞாயிறு | லக்னோ சூப்பர் ஜெயின்ட்ஸ் | தரம்சாலா | 7.30 |
| 12 | 8 - மே | வியாழன் | டெல்லி கேப்பிட்டல்ஸ் | தரம்சாலா | 7.30 |
| *13* | *11 - மே* | *ஞாயிறு* | *மும்பை இந்தியன்ஸ்* | *தரம்சாலா* | *3.30* |
| 14 | 16 - மே | வெள்ளி | ராஜஸ்தான் ராயல்ஸ் | ஜெய்ப்பூர் | 7.30 |



கேப்டன்




எதிர்பார்ப்பு



பழைய பன்னீர்செல்வம்

# பஞ்சாப் கிங்ஸ்

## ஐபிஎல் அட்டவணை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| *1* | *23- மார்ச்* | *ஞாயிறு* | *சன்ரைசர்ஸ் ஹைதராபாத்* | *ஹைதராபாத்* | *3.30* |
| 2 | 26- மார்ச் | புதன் | கொல்கத்தா நைட்ரைடர்ஸ் | குவஹாத்தி | 7.30 |
| 3 | 30- மார்ச் | ஞாயிறு | சென்னை சூப்பர் கிங்ஸ் | குவஹாத்தி | 7.30 |
| 4 | 5- ஏப்ரல் | சனி | பஞ்சாப் கிங்ஸ் | முல்லான்பூர் | 7.30 |
| 5 | 9- ஏப்ரல் | புதன் | குஜராத் டைட்டன்ஸ் | அகமதாபாத் | 7.30 |
| *6* | *13- ஏப்ரல்* | *ஞாயிறு* | *ராயல் சேலஞ்சர்ஸ் பெங்களூரு* | *ஜெய்ப்பூர்* | *3.30* |
| 7 | 16- ஏப்ரல் | புதன் | டெல்லி கேப்பிட்டல்ஸ் | டெல்லி | 7.30 |
| 8 | 19- ஏப்ரல் | சனி | லக்னோ சூப்பர் ஜெயின்ட்ஸ் | ஜெய்ப்பூர் | 7.30 |
| 9 | 24- ஏப்ரல் | வியாழன் | ராயல் சேலஞ்சர்ஸ் பெங்களூரு | பெங்களூரு | 7.30 |
| 10 | 28- ஏப்ரல் | திங்கள் | குஜராத் டைட்டன்ஸ் | ஜெய்ப்பூர் | 7.30 |
| 11 | 1 - மே | வியாழன் | மும்பை இந்தியன்ஸ் | ஜெய்ப்பூர் | 7.30 |
| *12* | *4 - மே* | *ஞாயிறு* | *கொல்கத்தா நைட்ரைடர்ஸ்* | *கொல்கத்தா* | *3.30* |
| 13 | 12 - மே | திங்கள் | சென்னை சூப்பர் கிங்ஸ் | சென்னை | 7.30 |
| 14 | 16 - மே | வெள்ளி | பஞ்சாப் கிங்ஸ் | ஜெய்ப்பூர் | 7.30 |



கேப்டன்



எதிர்பார்ப்பு




பெரிய இடம்

# ராஜஸ்தான் ராயல்ஸ்

## ஐபிஎல் அட்டவணை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1 | 22- மார்ச் | சனி | கொல்கத்தா நைட்ரைடர்ஸ் | கொல்கத்தா | 7.30 |
| 2 | 28- மார்ச் | வெள்ளி | சென்னை சூப்பர் கிங்ஸ் | சென்னை | 7.30 |
| 3 | 2- ஏப்ரல் | புதன் | குஜராத் டைட்டன்ஸ் | பெங்களூரு | 7.30 |
| 4 | 7- ஏப்ரல் | திங்கள் | மும்பை இந்தியன்ஸ் | மும்பை | 7.30 |
| 5 | 10- ஏப்ரல் | வியாழன் | டெல்லி கேப்பிட்டல்ஸ் | பெங்களூரு | 7.30 |
| *6* | *13- ஏப்ரல்* | *ஞாயிறு* | *ராஜஸ்தான் ராயல்ஸ்* | *ஜெய்ப்பூர்* | *3.30* |
| 7 | 18- ஏப்ரல் | வெள்ளி | பஞ்சாப் கிங்ஸ் | பெங்களூரு | 7.30 |
| *8* | *20- ஏப்ரல்* | *ஞாயிறு* | *பஞ்சாப் கிங்ஸ்* | *முல்லான்பூர்* | *3.30* |
| 9 | 24- ஏப்ரல் | வியாழன் | ராஜஸ்தான் ராயல்ஸ் | பெங்களூரு | 7.30 |
| 10 | 27- ஏப்ரல் | ஞாயிறு | டெல்லி கேப்பிட்டல்ஸ் | டெல்லி | 7.30 |
| 11 | 3 - மே | சனி | சென்னை சூப்பர் கிங்ஸ் | பெங்களூரு | 7.30 |
| 12 | 9 - மே | வெள்ளி | லக்னோ சூப்பர் ஜெயின்ட்ஸ் | லக்னோ | 7.30 |
| 13 | 13 - மே | செவ்வாய் | சன்ரைசர்ஸ் ஹைதராபாத் | பெங்களூரு | 7.30 |
| 14 | 17 - மே | சனி | கொல்கத்தா நைட்ரைடர்ஸ் | பெங்களூரு | 7.30 |



கேப்டன்


எதிர்பார்ப்பு


பெரிய இடம்

# ராயல் சேலஞ்சர்ஸ் பெங்களூரு

## ஐபிஎல் அட்டவணை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1 | 23- மார்ச் | ஞாயிறு | ராஜஸ்தான் ராயல்ஸ் | ஹைதராபாத் | 3.30 |
| 2 | 27- மார்ச் | வியாழன் | லக்னோ சூப்பர் ஜெயின்ட்ஸ் | ஹைதராபாத் | 7.30 |
| 3 | 30- மார்ச் | ஞாயிறு | டெல்லி கேப்பிட்டல்ஸ் | விசாகப்பட்டினம் | 3.30 |
| 4 | 3- ஏப்ரல் | வியாழன் | கொல்கத்தா நைட்ரைடர்ஸ் | கொல்கத்தா | 7.30 |
| 5 | 6- ஏப்ரல் | ஞாயிறு | குஜராத் டைட்டன்ஸ் | ஹைதராபாத் | 7.30 |
| 6 | 12- ஏப்ரல் | சனி | பஞ்சாப் கிங்ஸ் | ஹைதராபாத் | 7.30 |
| 7 | 17- ஏப்ரல் | வியாழன் | மும்பை இந்தியன்ஸ் | மும்பை | 7.30 |
| 8 | 23- ஏப்ரல் | புதன் | மும்பை இந்தியன்ஸ் | ஹைதராபாத் | 7.30 |
| 9 | 25- ஏப்ரல் | வெள்ளி | சென்னை சூப்பர் கிங்ஸ் | சென்னை | 7.30 |
| 10 | 2 - மே | வெள்ளி | குஜராத் டைட்டன்ஸ் | அகமதாபாத் | 7.30 |
| 11 | 5 - மே | திங்கள் | டெல்லி கேப்பிட்டல்ஸ் | ஹைதராபாத் | 7.30 |
| 12 | 10 - மே | சனி | கொல்கத்தா நைட்ரைடர்ஸ் | ஹைதராபாத் | 7.30 |
| 13 | 13 - மே | செவ்வாய் | ராயல் சேலஞ்சர்ஸ் பெங்களூரு | பெங்களூரு | 7.30 |
| 14 | 18 - மே | ஞாயிறு | லக்னோ சூப்பர் ஜெயின்ட்ஸ் | லக்னோ | 7.30 |



கேப்டன்


எதிர்பார்ப்பு


பெரிய இடம்

# சன்ரைசர்ஸ் ஹைதராபாத்

# ஸ்கோரர் (Scorer)

கிரிக்கெட்டில் ரன்களைக் குறித்து வைப்பவர் ஸ்கோரர் என்று அழைக்கப்படுகிறார். எல்லா ரன்களையும், விக்கெட்டுகளையும் குறித்து வைப்பது தான் இவர்களது பணி. கிரிக்கெட் விதிமுறை எண் 3ன் படி ஒவ்வொரு அணியும் ஒவ்வொரு ஸ்கோரரை நியமிக்க வேண்டும்.




இன்று ஸ்கோர் குறிக்க நிறைய தொழில்நுட்பம் வந்துவிட்டது. பேட்ஸ்மேன் எந்தத் திசையில் அடிக்கிறார் என்பதைக் கோடுகள் மூலம் குறிக்கும் தொழில்நுட்பமும் வந்துவிட்டது.

ரன்கள் எத்தனை (4, 6), எந்த வகை ரன் (வைடு, நோபால், பை, லெக்பை என்பதைத் தெரிவிப்பது அம்பயரின் வேலை. அம்பயரின் சைகையைக் குறித்துக் கொண்டதாகப் பதிலளிக்க வேண்டியது ஸ்கோரர் கடமை.

ஸ்கோர் குறிக்க வெற்றுப் பேப்பர் மற்றும் பென்சில் போதுமானது. ஆனால் பிரிண்ட் செய்யப்பட்ட புத்தகங்களாகக் கிடைக்கிறது.

புள்ளி விவரங்களுக்காகத் தனியார் ஆர்வலர்கள் ஸ்கோர் குறிப்பது உண்டு. பிபிசி ரேடியோவில் பணியாற்றிய பில் பிரிண்டால் குறிப்பிடத்தக்கவர்.




இங்கிலாந்து கிரிக்கெட் வாரியம் ஸ்கோரர்களுக்குத் தனிப்பயிற்சி அளிக்கிறது. ஸ்கோர் குறிக்க இலவச செயலிகளை உருவாக்கியுள்ளது.

| டெஸ்ட் போட்டி முடிவுகள் | | | | | |
|---|---|---|---|---|---|
| ஆடிய அணிகள் | | மைதானம் | தேதி | வென்ற அணி | ஆட்டநாயகன் |
| இலங்கை | ஆஸ்திரேலியா | காலி | பிப்ரவரி 06 - 10 | ஆஸ்திரேலியா | அலெக்ஸ் கேரி |
| 257 & 231 | 414 & 75/1 | | | 9 விக்கெட் | 156 |
| அயர்லாந்து | ஜிம்பாப்வே | புலவாயோ | பிப்ரவரி 06 - 10 | அயர்லாந்து | ஆண்டி மெக்பிரைன் |
| 260 & 298 | 267 & 228 | | | 63 ரன்கள் | 90*, 3/59 & 1/69 |

| டி20 போட்டி முடிவுகள்* | | | | | |
|---|---|---|---|---|---|
| **ஆடிய அணிகள்** | | **மைதானம்** | **தேதி** | **வென்ற அணி** | **ஆட்டநாயகன்** |
| இந்தியா | இங்கிலாந்து | மும்பை | பிப்ரவரி 02 | இந்தியா | அபிஷேக் சர்மா |
| 247/9 | 97 | | | 150 ரன்கள் | 135 & 2/3 |
| ஓமன் | அமெரிக்கா | அல் அமீரட் | பிப்ரவரி 20 | அமெரிக்கா | சாய்தேஜா முக்கமல்லா |
| 190/5 | 194/3 | | | 7 விக்கெட் | 100* |
| ஓமன் | அமெரிக்கா | அல் அமீரட் | பிப்ரவரி 21 | அமெரிக்கா | மோனன்க் பட்டேல் |
| 141/9 | 142/6 | | | 4 விக்கெட் | 73* |
| ஜிம்பாப்வே | அயர்லாந்து | ஹராரே | பிப்ரவரி 22 | முடிவு இல்லை | |
| 77/5 | - | | | | |
| ஓமன் | அமெரிக்கா | அல் அமீரட் | பிப்ரவரி 23 | அமெரிக்கா | மிலிந்த் குமார் |
| 123 | 127/2 | | | 8 விக்கெட் | 1/14 & 56* |
| அயர்லாந்து | ஜிம்பாப்வே | ஹராரே | பிப்ரவரி 23 | ஜிம்பாப்வே | டோனி முன்யோங்கா |
| 137/8 | 141/7 | | | 3 விக்கெட் | 43* |
| ஜிம்பாப்வே | அயர்லாந்து | ஹராரே | பிப்ரவரி 25 | முடிவு இல்லை | |
| 142/6 | - | | | | |

*முக்கிய அணிகளின் போட்டி மட்டுமே தரப்பட்டுள்ளது

| ஒரு நாள் போட்டி முடிவுகள் | | | | | |
|---|---|---|---|---|---|
| **ஆடிய அணிகள்** | | **மைதானம்** | **தேதி** | **வென்ற அணி** | **ஆட்டநாயகன்** |
| இங்கிலாந்து | இந்தியா | நாக்பூர் | பிப்ரவரி 06 | இந்தியா | சுப்மன் கில் |
| 248 | 251/6 | | | 4 விக்கெட் | 87 |
| அமெரிக்கா | நமீபியா | அல் அமீரட் | பிப்ரவரி 08 | அமெரிக்கா | மிலிந்த் குமார் |
| 293/8 | 179 | | | 114 ரன்கள் | 54*, 4/48 & 2 கேட்ச் |
| நியூஸிலாந்து | பாகிஸ்தான் | லாகூர் | பிப்ரவரி 08 | நியூஸிலாந்து | க்ளென் பிலிப்ஸ் |
| 330/6 | 252 | | | 114 ரன்கள் | 106* & 1/18 |
| இங்கிலாந்து | இந்தியா | கட்டாக் | பிப்ரவரி 09 | இந்தியா | ரோகித் சர்மா |
| 304 | 308/6 | | | 4 விக்கெட் | 119 |
| தென் ஆப்பிரிக்கா | நியூஸிலாந்து | லாகூர் | பிப்ரவரி 10 | நியூஸிலாந்து | கனே வில்லியம்சன் |
| 304/6 | 308/4 | | | 6 விக்கெட் | 133* |
| நமீபியா | ஓமன் | அல் அமீரட் | பிப்ரவரி 10 | நமீபியா | மாலன் க்ருகர் |
| 169 | 146 | | | 23 ரன்கள் | 39 |
| இலங்கை | ஆஸ்திரேலியா | கொழும்பு | பிப்ரவரி 12 | இலங்கை | சரித் அசலங்க |
| 214 | 165 | | | 49 ரன்கள் | 127 & 1/5 |
| அமெரிக்கா | ஓமன் | அல் அமீரட் | பிப்ரவரி 12 | ஓமன் | ஷகீல் அஹமது |
| 151 | 152/3 | | | 7 விக்கெட் | 4/26 |
| இந்தியா | இங்கிலாந்து | அகமதாபாத் | பிப்ரவரி 12 | இந்தியா | சுப்மன் கில் |
| 356 | 214 | | | 142 ரன்கள் | 112 |

# லெஜென்ட்ஸ் 90 லீக்

இருபது ஓவர் போட்டி, பத்து ஓவர் போட்டி, 100 பந்து போட்டி எனப் புது புது தொடர்கள் வந்த நிலையில் புதிதாக 90 பந்துகள் (15 ஓவர்) போட்டி வந்துள்ளது.

ஓய்வு பெற்ற கிரிக்கெட் வீரர்கள் விளையாடிய லெஜென்ட்ஸ் 90 லீக் தொடர் ராய்ப்பூர்-ல் பிப்ரவரி 6 முதல் 17 வரை நடைபெற்றது. இந்தத் தொடரில் முக்கிய விதி ஒரு பந்து வீச்சாளர் மட்டும் 4 ஓவர்கள் வீசலாம்.




**<u>அணிகள் - கேப்டன்</u>**

சட்டிஸ்கர் வாரியர்ஸ் - குர்கீரத் மான் சிங்

ராஜஸ்தான் கிங்ஸ் - பைஸ் பாசல்

டெல்லி ராயல்ஸ் - ஷிகர் தவான்

குஜராத் சாம்ப் ஆர்மி - திசாரா பெரீரா

துபாய் ஜெயின்ட்ஸ் - ரிச்சர்ட் லெவி

பிக் பாய்ஸ் - இஷான் மல்கோத்ரா

பஞ்சாபி ஷெர் - ஆதித்யா சாப்ரா

எல்லா அணிகளும் தலா 5 போட்டிகளில் ஆடின. பஞ்சாபி ஷெர் அணி 4 போட்டிகளில் மட்டுமே ஆடியது.

**<u>எலிமினேட்டர் - பிப்ரவரி 15 - ராய்ப்பூர்</u>**

*டெல்லி ராயல்ஸ் - 160/6*

பிபுல் சர்மா - 44

சுபோத் பாட்டி - 3/21

*குஜராத் சாம்ப் ஆர்மி - 117*

மௌசிப் கான் - 36

ஜெரோம் டெய்லர் - 3/20

***டெல்லி ராயல்ஸ் 43 ரன்கள் வித்தியாசத்தில் வெற்றி***

ஆட்டநாயகன் - பிபுல் சர்மா - 44

**குவாலிபயர் 1 - பிப்ரவரி 15 - ராய்ப்பூர்**

*ராஜஸ்தான் கிங்ஸ் -171/4*

பில் மஸ்டர்ட் - 77

அபிமன்யு மிதுன் - 2/33

*சட்டிஸ்கர் வாரியர்ஸ் - 174/2*

ரிஷி தவான் – 99*

அங்கிட் ராஜ்புட் - 1/31

***சட்டிஸ்கர் வாரியர்ஸ் 8 விக்கெட் வித்தியாசத்தில் வெற்றி***

ஆட்டநாயகன் - ரிஷி தவான் - 99*

**குவாலிபயர் 2 - பிப்ரவரி 16 - ராய்ப்பூர்**

*டெல்லி ராயல்ஸ் - 167/5*

லின்டில் சிம்மன்ஸ் - 63

அங்கிட் ராஜ்புட் - 2/55

*ராஜஸ்தான் கிங்ஸ் - 171/4*

ராஜத் சிங் - 56

ஜெரோம் டெய்லர் - 2/28

***ராஜஸ்தான் கிங்ஸ் 6 விக்கெட் வித்தியாசத்தில் வெற்றி***

ஆட்டநாயகன் - பில் மஸ்டர்ட் - 53*

**இறுதிப் போட்டி - பிப்ரவரி 17 - ராய்ப்பூர்**

இறுதிப் போட்டியில் கடைசி இரண்டு ஓவர்களில் சட்டிஸ்கர் வாரியர்ஸ் அணிக்கு 33 ரன்கள் தேவைப்பட்டது. 14வது ஓவர் முதல் பந்தில் மனன் சர்மா அவுட் ஆனார். அடுத்து வந்த அபிமன்யு மிதுன், ராகுல் சுக்லா வீசிய அந்த ஓவரில் நான்கு போர்கள் மற்றும் கடைசிப் பந்தில் சிக்ஸ் அடித்தார்.

கடைசி ஓவரில் 11 ரன்கள் தேவைப்பட்டது. ராஜ்புட் வீசினார். முதல் இரண்டு பந்துகளில் போர் அடித்தார் ரிஷி தவான். நடுவில் ஒரு வைடு போட்டார் ராஜ்புட். 3வது பந்தில் ஒரு ரன் அடித்தார் ரிஷி. ஒரு ரன் எடுத்தால் வெற்றி என்ற நிலையில் 4வது பந்தில் அபிமன்யு மிதுனும், 5வது பந்தில் கேவோன் கூப்பரும் அவுட்டாக ஆட்டம் பரபரப்பானது. கடைசிப் பந்தில் சிக்ஸர் அடித்து வெற்றி பெற வைத்தார் சித்தார்த் கௌல்.




*ராஜஸ்தான் கிங்ஸ் - 159/4*

அசாத் பதான் - 38

*பவன் நெகி - 2/31*

*சட்டிஸ்கர் வாரியர்ஸ் - 165/8*

ரிஷி தவான் - 74*

அங்கிட் ராஜ்புட் - 3/33

***சட்டிஸ்கர் வாரியர்ஸ் 2 விக்கெட் வித்தியாசத்தில் வெற்றி***

ஆட்டநாயகன் - ரிஷி தவான் - 74*






*துடுப்பாட்டம் ரசிகர்களுக்கு சிறப்பு (குறைந்த) விலையில் உதயகிருஷ்ணா நெய், மதுரை, விருதுநகர், தேனி, ராம்நாட் , சிவகங்கை மக்கள் தொடர்பு கொள்ளவும்...*
*80720 13145*

More updates Follow
@yudhistan216450

9841754302

**Sathya Sai Communication**

**Mobiles Sales and Service**
**Chargers, Bluetooth, Headphones**

4 Core Cables

**Customised Photo case, mugs, Pillows**
**frames, lights & keychains**

**Sisko Cables dealer v8, Type C & iPhone**
**Delivery all over tamilnadu available**

*70/298 Thiruvudal street*
*Thiruvannamalai*






## துடுப்பாட்டம் முதல் தமிழ் கிரிக்கெட் மாத இதழ்

தமிழில் ஒரு கிரிக்கெட் இதழை வெளியிடுவதில் பெருமகிழ்ச்சி கொள்கிறோம்.

உங்கள் கருத்துக்கள் / விமர்சனங்கள் வரவேற்கப்படுகிறது.

நீங்கள் கலந்து கொள்ளும் டோர்னமெண்ட் பற்றி துடுப்பாட்டம் இதழில் வெளியாக வேண்டுமா? தொடர்பு கொள்ளுங்கள்.

# மறக்க முடியாத போட்டி

- சு. பழனி செல்வகுமார்

டெஸ்ட் போட்டிகள் என்றாலே மெதுவாகப் போகும். கடைசி நாளில் ஒரு வேளை பரபரப்பாகப் போகலாம் என்ற சூழல் தான் நிலவியது. லட்சுமன் 281 அடித்த டெஸ்ட் போட்டிக்குப் பிறகு இந்தியா - ஆஸ்திரேலியா டெஸ்ட் போட்டிகளில் அதிக ஈர்ப்பு ஏற்படத் துவங்கியது.

அப்படி ஒரு போட்டி தான் 2010 அக்டோபரில் நடைபெற்ற இந்தியா - ஆஸ்திரேலியா முதல் டெஸ்ட் போட்டி. இந்திய அணி கம்பீர், சேவாக், டிராவிட், சச்சின், லட்சுமன், ரெய்னா, தோனி, ஹர்பஜன், ஜாகீர், இஷாந்த் & ஓஜா

ஆஸ்திரேலிய அணி வாட்சன், கேடிச், பாண்டிங், கிளார்க், ஹசி, மார்கஸ் நார்த், பெயின், ஜான்சன், ஹெளரிட்ஸ், ஹில்பனாஸ் & போலிஞ்சர்.

ஆஸ்திரேலிய டாஸ் வென்று பேட்டிங் செய்தது. கேடிச் சீக்கிரம் அவுட் ஆனாலும் வாட்சன் நிலைத்து நின்று ஆடினார். முதல் நாள் முடிவில் ஆஸ்திரேலியா 5 விக்கெட் இழப்பிற்கு 244 ரன்கள் எடுத்தது. பாண்டிங் 71 ரன்கள் எடுத்தார். வாட்சன் சதமடித்து ஆட்டமிழக்காமல் இருந்தார்.



முதல் நாளில் 11 ஓவர்கள் மட்டுமே வீசிய நிலையில் இஷாந்த் ஷர்மா வெளியேறினார். இரண்டாம் நாளில் நீண்ட நேரம் பீல்டிங் செய்த பிறகு பந்து வீசினார். முதல் இன்னிங்சில் இந்தியா 80 ஓவர்களுக்குப் பிறகும் புதிய பந்தை வாங்கவில்லை. 145வது ஓவரில் தான் புதிய பந்தை வாங்கியது. இரண்டாம் நாள் தேனீர் இடைவேளைக்குப் பிறகு ஆஸ்திரேலியா 428 ரன்களுக்கு ஆல் அவுட் ஆனது.

வாட்சன் 125, பெயின் 92, ஜான்சன் 47 அடித்தனர். இந்தியா தரப்பில் ஜாகீர் 5 விக்கெட்டுகளையும் டர்பனேட்டர் 3 விக்கெட்டுகளையும் வீழ்த்தினர். இரண்டாம் நாள் முடிவில் இந்தியா 2 விக்கெட்டுகளை இழந்து இருந்தது. டிராவிட் மற்றும் இரவுக் காப்பாளராக இஷாந்த் களத்தில் இருந்தனர்.

மூன்றாம் நாள் முழுக்க இந்தியா பேட்டிங் செய்து 405 ரன்களுக்கு ஆல் அவுட் ஆனது. முதுகு வலி காரணமாக லட்சுமன், ஹர்பஜன் சிங்கிற்குப் பிறகு தான் களம் இறங்கினார். ரன்னராக கம்பீர் ஓடினார். சேவாக் 59, டிராவிட் 77 என பங்களித்தனர். சச்சின் 98 ரன்கள் எடுத்த நிலையில் நார்த் பந்தில் வீழ்ந்தார். ரெய்னா 86 ரன்கள் எடுத்தார். இஷாந்த் ஷர்மாவின் 18 ரன்களும் குறிப்பிடத்தகுந்த பங்களிப்பு.




நான்காம் நாளில் இந்தியா சிறப்பாகப் பந்து வீசியது. வாட்சன் 56 ரன்கள் அடித்தார். தேனீர் இடைவேளைக்குப் பிறகு ஆஸ்திரேலியா 192 ரன்களுக்கு ஆல் அவுட் ஆனது. வேகப்பந்து வீச்சாளர்கள் ஜாகீர், இஷாந்த் தலா 3 விக்கெட்டுகளையும் சுழற்பந்து வீச்சாளர்கள் ஹர்பஜன், ஓஜா தலா 2 விக்கெட்டுகளையும் வீழ்த்தினர்.

216 என்ற இலக்கைத் துரத்திய இந்தியா விரைவாக விக்கெட்டுகளை இழந்தது. முதல் ஓவரில் கம்பீர் வீழ்ந்தார். டிராவிட், சேவாக், ரெய்னாவும் சொற்ப ரன்களில் வீழ்ந்தனர். நான்காம் நாள் முடிவில் இந்தியா 4 விக்கெட் இழப்பிற்கு 55 ரன்களே எடுத்திருந்தது. சச்சின் மற்றும் ஜாகிர் (இரவுக் காப்பாளர்) களத்தில் இருந்தனர்.

ஐந்தாம் நாளில் லட்சமன் களம் இறங்கினார். ரன்னராக ரெய்னா உடன் வந்தார். சச்சின் அவுட்டாகி விட தோனி களத்திற்கு வந்தார். ரன்னர் இருப்பது தெரியாமல் லேட்டாக ஓடி ரன் அவுட் ஆனார் கேப்டன் தோனி. இந்தியா 7 விக்கெட் இழப்பிற்கு 122. அடுத்த வந்த ஹர்பஜனும் நடையைக் கட்ட 124/8.




இஷாந்த் சிறப்பாகப் பேட்டிங் செய்தார். சிறந்த பார்டனர்ஷிப்பும் கொடுத்தார். 205 என்ற நிலையில் இஷாந்த் (31) அவுட்டாக ஆட்டம் பரபரப்பானது. ஓஜா களத்திற்கு வந்தார் அவர் சரியாகக் கவனித்து ஓடவில்லை என்று மைதானத்தில் வைத்தே திட்டினார் லட்சுமன். ஆனால் வெற்றிக்கான ரன்னை ஓஜாவே அடித்தார். இந்தியா 1 விக்கெட் வித்தியாசத்தில் வென்றது.

**ஆட்டநாயகன் ஜாஹீர் கான் - 5/94 & 3/43**



# பங்களாதேஷ் பிரிமியர் லீக்

பங்களாதேஷ் பிரிமியர் லீக் டிசம்பர் 30-ல் தொடங்கி பிப்ரவரி 7 வரை நடைபெற்றது. இந்தத் தொடரில் தர்பார் ராஜ்ஷாஹி அணி சம்பள பிரச்சனையில் சிக்கியது. முதலில் உள்ளூர் வீரர்கள் தங்களது சம்பளம் வழங்கப்படவில்லை எனக் கோரிக்கை வைத்தனர். பிறகு வெளிநாட்டு வீரர்களுக்கும் அதே பிரச்சினை நிகழ்ந்தது. வெளிநாட்டு வீரர்கள் வேலைநிறுத்தம் செய்ததால் ஒரு போட்டியில் 11 பங்களாதேஷ் வீரர்களை வைத்து ஆடியது தர்பார் ராஜ்ஷாஹி அணி. இறுதியாக பங்களாதேஷ் விளையாட்டு அமைச்சகம் பிப்ரவரி 10 அன்று அனைவருக்கும் சம்பளம் வழங்கப்படும் என உறுதி அளித்தது.

**டான்ஸித் - லிட்டனின் அதிரடி**

ஜனவரி 12-ல் நடைபெற்ற போட்டியில் டாக்கா கேப்பிட்டல்ஸ் அணி 1 விக்கெட் இழப்பிற்கு 254 ரன்களைக் குவித்தது. துவக்க வீரர் டான்ஸித் ஹசன் 64 பந்துகளில் 108 ரன்கள் (6x4, 8x6) அடித்தார். மற்றொரு துவக்க வீரர் லிட்டன் தாஸ் 55 பந்துகளில் 125* ரன்கள் (10x4, 9x6) அடித்தார். சேஸ் செய்த தர்பார் ராஜ்ஷாஹி அணி 105 ரன்களுக்கு ஆல் அவுட் ஆகி 149 ரன்கள் வித்தியாசத்தில் தோற்றது.



**சேசிங்கில் சாதித்த ஹேல்ஸ்**

ஜனவரி 6-ல் நடைபெற்ற போட்டியில் சைல்காட் ஸ்ட்ரைக்கர்ஸ் அணி 4 விக்கெட் இழப்பிற்கு 205 ரன்கள் எடுத்தது. ரோனி தாடுல்கர் (54), ஜாகிர் ஹசன் (50) அரை சதம் அடித்தனர்.

சேஸ் செய்த ரங்க்பூர் ரைடர்ஸ் அணி அலெக்ஸ் ஹேல்ஸின் அதிரடி சதத்தால் 2 விக்கெட்டுகளை மட்டுமே இழந்து இலக்கை எட்டியது. அலெக்ஸ் ஹேல்ஸ் 113 ரன்கள் அடித்து ஆட்டமிழக்காமல் இருந்தார்.

**73 ரன்களுக்கு ஆல் அவுட் ஆன டாக்கா அணி**

ஜனவரி 29-ல் நடைபெற்ற பார்ச்சூன் பரிசால் அணிக்கு எதிரான போட்டியில் டாக்கா கேப்பிட்டல்ஸ் அணி 73 ரன்களுக்கு ஆல் அவுட் ஆனது. பார்ச்சூன் பரிசால் அணி சார்பில் முகமது நபி, தன்வீர் இஸ்லாம், பஹ்ஹிம் அஸ்ரப் தலா 3 விக்கெட்டுகளை வீழ்த்தினர்.

**வீணாய்ப் போன சைபுதீனின் அரை சதம்**

ஜனவரி 26-ல் நடைபெற்ற போட்டியில் தர்பார் ராஜ்ஷாஹி அணி 9 விக்கெட் இழப்பிற்கு 119 ரன்களை எடுத்தது. ரங்க்பூர் ரைடர்ஸ் அணி சேஸ் செய்தது. கடைசி மூன்று ஓவர்களில் 45 ரன்கள் தேவைப்பட்டது. 18வது ஓவரில் முகமது சைபுதீன் 2 போர்கள் அடித்தார். 12 பந்துகளில் 37 ரன்கள் தேவை என்ற நிலை. 19வது ஓவரில் 12 ரன்கள் கிடைத்தது. 6 பந்துகளில் 25 ரன்கள் தேவைப்பட்டது சைபுதீன் பேட்டிங் முனைக்கு வந்தார். முதல் இரண்டு பந்துகளில் சிக்ஸர் அடித்தார். அடுத்த இரண்டு பந்துகளில் ரன் எடுக்கவில்லை. 5வது பந்தில் போரும் கடைசிப் பந்தில் சிக்ஸரும் அடித்தார். அவ்வளவு போராடியும் சைபுதீனால் அரை சதம் கடக்க முடிந்தது, அணியைக் கரை சேர்க்க முடியவில்லை. 2 ரன்கள் வித்தியாசத்தில் தோற்றது ரங்க்பூர் ரைடர்ஸ் அணி.

**மிரட்டிய தஸ்கின்**

ஜனவரி 2-ல் நடைபெற்ற டாக்கா கேப்பிட்டல்ஸ் அணிக்கு எதிரான போட்டியில் தர்பார் ராஜ்ஷாஹி அணியின் வேகப்பந்து வீச்சாளர் தஸ்கின் அகமது 7 விக்கெட்டுகளை வீழ்த்தினார். கடைசி ஓவரில் தஸ்கினுக்கு ஹாட்ரிக் விக்கெட் வாய்ப்பு வந்தது. ஆனால் ஹாட்ரிக் எடுக்கவில்லை.



**<u>எலிமினேட்டர் - பிப்ரவரி 3 - மிர்பூர்</u>**

*ரங்க்பூர் ரைடர்ஸ் - 85*

ஆகிப் ஜாவேத் - 32

மெஹிதி ஹசன் மிராஸ் - 3/10

*குல்னா டைகர்ஸ் - 89/1*

முகமது நயீம் - 48*

ஆகிப் ஜாவேத் - 1/20

***குல்னா டைகர்ஸ் 9 விக்கெட் வித்தியாசத்தில் வெற்றி***

ஆட்டநாயகன் - நசும் அகமது - 3/16




**<u>குவாலிபயர் 1 - பிப்ரவரி 3 - மிர்பூர்</u>**

*சிட்டகாங் கிங்ஸ் - 149/9*

ஸமீம் ஹோசைன் - 79

முகமது அலி - 5/24

*பார்ச்சூன் பரிசால் - 150/1*

டௌகித் ஹிரிடாய் - 82*

காலேத் அகமது - 1/34

***பார்ச்சூன் பரிசால் 9 விக்கெட் வித்தியாசத்தில் வெற்றி***

ஆட்டநாயகன் முகமது அலி 5/24

**<u>குவாலிபயர் 2 - பிப்ரவரி 5 - மிர்பூர்</u>**

*குல்னா டைகர்ஸ் - 163/6*

ஸிம்ரன் ஹெட்மேர் - 63

பினுர பெர்ணான்டோ - 2/27

*சிட்டகாங் கிங்ஸ் - 164/8*

கவாஜா நஃபே - 57

முஷ்பிக் ஹசன் -3/32

***சிட்டகாங் கிங்ஸ் 2 விக்கெட் வித்தியாசத்தில் வெற்றி***

ஆட்டநாயகன் அல் இஸ்லாம் - 17* & 1/14

(அல் இஸ்லாம் பேட்டிங் ஆடி ரிட்டயர்ட் ஹட் முறையில் வெளியேறினார். கடைசிப் பந்தில் மீண்டும் வந்து போர் அடித்து அணிக்கு வெற்றியைத் தந்தார்)

**<u>இறுதிப் போட்டி - பிப்ரவரி 7 - மிர்பூர்</u>**

*சிட்டகாங் கிங்ஸ் - 194/3*

பர்வீஸ் ஹோசைன் இமான் - 78*

முகமது அலி - 1/21

*பார்ச்சூன் பரிசால் - 195/7*

தமீம் இக்பால் - 54

சோரிபுல் இஸ்லாம் - 4/34

***பார்ச்சூன் பரிசால் 3 விக்கெட் வித்தியாசத்தில் வெற்றி***

ஆட்டநாயகன் - தமீம் இக்பால் – 54



**அதிக ரன்கள் அடித்த வீரர்கள்**

முகமது நயீம் - 511

டான்ஸித் ஹசன் - 485

கிரஹாம் கிளார்க்* - 431

தமீம் இக்பால் - 413

அனமுல் ஹக் – 392




**அதிக விக்கெட் எடுத்த வீரர்கள்**

தஸ்கின் அகமது - 25

பஹ்ஹிம் அஸ்ரப்* - 20

ஆகிப் ஜாவேத்* - 20

காலேத் அகமது - 20

குஸ்தில் ஷா* - 17

*வெளிநாட்டு வீரர்கள்

2027 உலகக் கோப்பை தகுதி பெற அஸோஸியேட் அணிகளுக்கிடையே ஒரு நாள் போட்டியை நடத்துகிறது ஐசிசி

| உலகக் கோப்பை லீக்-2 புள்ளிப் பட்டியல் | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| இடம் | அணிகள் | போட்டிகள் | வெற்றி | தோல்வி | டை | மு இ | புள்ளிகள் | நி ர ரே |
| 1 | அமெரிக்கா | 16 | 11 | 5 | 0 | 0 | 22 | 0.602 |
| 2 | ஓமன் | 16 | 8 | 6 | 0 | 2 | 18 | 0.013 |
| 3 | கனடா | 12 | 8 | 4 | 0 | 0 | 16 | 0.292 |
| 4 | நெதர்லாந்து | 12 | 7 | 5 | 0 | 0 | 14 | 0.144 |
| 5 | ஸ்காட்லாந்து | 11 | 6 | 3 | 0 | 2 | 14 | 1.247 |
| 6 | நமீபியா | 16 | 6 | 10 | 0 | 0 | 12 | -0.535 |
| 7 | நேபாள் | 12 | 2 | 8 | 0 | 2 | 6 | -0.271 |
| 8 | எமிரேட்ஸ் | 11 | 2 | 9 | 0 | 0 | 4 | -1.442 |

மு இ - முடிவு இல்லாதவை
நி ர ரே- நிகர ரன் ரேட்

# ஆப்கானிஸ்தான் - இங்கிலாந்து

இதுவரை நடந்த சாம்பியன்ஸ் டிராபி போட்டிகளில் ஒரு சிறப்பான போட்டி என்றால் அது ஆப்கானிஸ்தான் - இங்கிலாந்து போட்டி தான். லாகூர் மைதானம் பேட்ஸ்மேன்களின் சொர்க்கபுரி. பேட்ஸ்மேன்கள் தவறு செய்தால் மட்டுமே விக்கெட் விழும் என்ற நிலை.

ஆப்கானிஸ்தான் டாஸ் வென்று பேட்டிங் செய்தது. இங்கிலாந்து அணி சிறப்பாகப் பந்து வீசியது 5வது ஓவரில் ஆர்ச்சர் குர்பாஸ் மற்றும் செடிக்குல்லா விக்கெட்டுகளை வீழ்த்தினார். பொறுமையாக ஆடும் ரஹ்மத் ஷா ஷார்ட் பாலைத் தூக்கி அடித்து அவுட் ஆனார். ஆப்கானிஸ்தான் 10 ஓவர் முடிவில் 39/3.

ஆப்கானிஸ்தான் தெளிவான திட்டமிடலுடன் ஆடியது. 20 ஓவர் முடிவில் 80 ரன்கள், 30 ஓவர் முடிவில் 150, 40 ஓவர் முடிவில் 225, 50 ஓவர் முடிவில் 300 என்பது தான் இலக்கு.

11வது ஓவர் முதல் 20வது ஓவர் வரை இப்ராஹிம் ஷத்ரான் - கேப்டன் ஷாகிதி இணை மெதுவாக ஆடியது. 20வது ஓவர் முடிவில் ஆப்கானிஸ்தான் 81/3. 21வது ஓவர் முதல் 30வது ஓவர் வரை சற்றே வேகத்தைக் கூட்டியது. 30வது ஓவரில் தேவையில்லாத ஷாட் அடித்து அவுட் ஆனார் ஷாகிதி. 30வது ஓவர் முடிவில் ஆப்கானிஸ்தான் 143/4.

மார்க் வுட் காயம் காரணமாக வெளியேறியதால் குறிப்பிட்ட நேரத்திற்குப் பிறகே பந்து வீச முடிந்தது. ஆனால் அதுவும் வலியோடே வீசினார். 31வது ஓவர் முதல் 40 வரை இப்ராஹிம் - ஓமர்சாய் இணை ஆடியது. 40வது ஓவரில் தனது பங்கிற்கு 40 ரன்கள் எடுத்து அவுட் ஆனார் ஓமர்சாய், ஆப்கானிஸ்தான் 212/5.




41-50 ஓவர்களில் ஆப்கானிஸ்தான் வேகத்தை அதிகரித்தது. ஆர்ச்சர் (44வது) ஓவரில் 20 ரன்கள் எடுத்தது. 47வது ஓவரை வீச ரூட்டை அழைத்தார் பட்லர். அந்த ஓவரை ஆப்கானிஸ்தான் பயன்படுத்தி 23 ரன்கள் எடுத்தது. ஆப்கானிஸ்தான் சொதப்பியது

50வது ஓவரில் மட்டுமே. 177 ரன்கள் எடுத்திருந்த இப்ராஹிம் ஷத்ரான் மற்றும் 40 ரன்கள் எடுத்திருந்த நபி இருவரும் அவுட் ஆனார்கள். 2 ரன்கள் மட்டுமே கிடைத்தது. வீசியது பகுதி நேரப் பந்து வீச்சாளர் லிவிங்ஸ்டன். ஆப்கானிஸ்தான் 325 ரன்கள் எடுத்தது.

இங்கிலாந்து அணி முதல் பந்திலேயே பவுண்டரி அடித்துத் துவங்கியது. 4வது ஓவரில் ஓமர்சாய், பில் சால்ட்டைப் பவுல்டாக்கினார்.

7வது ஓவரில் பந்து வீச்சில் மாற்றம் கொண்டு வந்தார் ஷாகிதி. நபி வீசிய அந்த ஓவரின் முதல் பந்தில் வீழ்ந்தார் ஜேமி ஸ்மித். தூக்கி அடித்தால் மட்டுமே விக்கெட் விழும் என்பதை உணர்ந்து ஆடியது டக்கெட் - ரூட் இணை. 10 ஓவரில் இங்கிலாந்து 60 ரன்களை எட்டியது. 14வது ஓவரில் கைக்கு வந்த கேட்ச்சைத் தவறவிட்டார் ஷாகிதி. தப்பிய டக்கெட் நீண்ட நேரம் ஆடவில்லை, 17வது ஓவரில் ஆப்கானிஸ்தான் ரிவ்யூ கேட்க எல்பிடபிள்யூ ஆனார்.




20வது ஓவரில் 124 ரன்களை எட்டியது இங்கிலாந்து. 22வது ஓவரில் ஹாரி புரூக்கை வெளியேற்றினார் நபி. கேப்டன் பட்லர், ரூட்டுடன் இணைந்தார். பட்லர் அம்பயர் கால் மூலம் தப்பினார். 30வது ஓவர் முடிவில் இங்கிலாந்து 172/4

ஆப்கானிஸ்தான் அணியில் ஷாகிதி, பரூக்கி, நூர் அகமது, குல்பதீன் ஆகிய நால்வரின் பீல்டிங்கில் வேகம் இல்லை. ஆகவே இந்த நால்வரையும் முடிந்த அளவு எல்லைக் கோட்டுக்கு அருகே பீல்டிங் செய்ய அனுப்பவில்லை. மற்ற 5 பேரும் சிறப்பாக, துடிப்பாக பீல்டிங் செய்தனர்.

34வது ஓவரில் ஓமர்சாய் பந்தைத் தூக்கி அடிக்க ரஹ்மத் ஷா எளிதாகப் பிடித்தார். அப்போது இங்கிலாந்து 216/5. தொடர்ந்து ரன் போய்க்கொண்டே இருந்ததால் ஆப்கானிஸ்தானுக்கு ஒரு பந்து வீச்சாளர் குறைவாக இருப்பது போல் தோன்றியது.

இந்த நிலையில் இருமுனைக் கத்தியான புஜபல பராக்கிரமசாலி குல்பதீனைப் பந்து வீச அழைத்தார். அந்த ஓவரில் லிவிங்ஸ்டன் அவுட் ஆனார். 40வது ஓவர் முடிவில் இங்கிலாந்து 236/6. 60 பந்துகளில் 90 ரன்கள் தேவை, ரூட் - ஓவர்டன் களத்தில்.

42வது ஓவரில் ரூட் சதமடித்தார். இங்கிலாந்துக்குக் கடைசி ஐந்து ஓவர்களில் 48 ரன்கள் தேவைப்பட்டது. ஓமர்சாய் 3 ஓவர்களையும், பரூக்கி இரண்டு ஓவர்களையும் வீசத் தயார் ஆனார்கள்.

46வது ஓவரில் ரூட் கீப்பர் கேட்ச் ஆனார். 24 பந்துகளில் 35 ரன்கள் தேவைப்பட்டது. இங்கிலாந்து ஒவ்வொரு ஓவரிலும் கிட்டத்தட்ட 10 ரன்கள் அடித்தது. 18 பந்துகளில் 25 ரன்கள் தேவைப்பட்டது.

ஓமர்சாய் சிறப்பாகப் பந்து வீசினார். வேகத்தைக் குறைத்து, லைனை மாற்றி, உயரத்தை மாற்றி எனப் பேட்ஸ்மேன்களை எளிதாக ரன் எடுக்கவிடவில்லை. 48வது ஓவரில் ஓவர்டன் தூக்கி அடித்து அவுட் ஆனார். கடைசி இரண்டு ஓவர்களில் 16 ரன்கள் தேவை என்ற நிலை. ஆர்ச்சர் - அடில் ரஷீத் களத்தில் இருந்தனர். 49வது ஓவரில் தேவையில்லாமல் தூக்கி அடித்து அவுட் ஆனார் ஆர்ச்சர்.

கடைசி ஓவரில் 13 ரன்கள் தேவைப்பட்டது. மார்க் வுட் வந்தார். ஓமர்சாய் வீசிய அந்த ஓவரில் முதல் நான்கு பந்துகளில் தலா 1 ரன் மட்டுமே எடுக்க, 5வது பந்தைத் தூக்கி அடிக்க வேண்டிய கட்டாயத்தில் தூக்கி அடித்தார் ரஷீத், அது இப்ராஹிம் கையில் சிக்கியது. ஆப்கானிஸ்தான் 8 ரன்கள் வித்தியாசத்தில் வென்றது. 50வது ஓவர் 5வது பந்து வரை வெற்றி மதில் மேல் பூனையாக இருந்தது குறிப்பிடத்தக்கது. ஓமர்சாய் 5 விக்கெட்டுகளை வீழ்த்தினார். 177 ரன்களைக் குவித்த இப்ராஹிம் ஷத்ரான் ஆட்டநாயகன் ஆனார். இந்தப் போட்டியில் ரஷீத்கான் பீல்டிங்கும் பாராட்டத்தக்கது.



# போட்டித் துணுக்குகள்

**ஓமன் - அமெரிக்கா முதல் டி20 போட்டி - அல் அமீரட் - பிப்ரவரி 20**

- ✓ ஓமன் அணியின் துவக்க வீரர் அமீர் கலீம் (72) அரைசதம் அடித்தார். 43 வயதான அமீர் கலீமிற்கு இது முதல் சர்வதேசப் போட்டி அரைசதமாகும்.
- ✓ அமெரிக்க அணியின் சாய்தேஜா முக்கமல்லா 48 பந்துகளில் 100 ரன்களைக் குவித்தார். சர்வதேச டி20 போட்டிகளில் சதமடித்த இரண்டாவது அமெரிக்க வீரர் ஆனார் சாய்தேஜா.




- ✓ இரு அணிகளும் 6 பந்து வீச்சாளர்களைப் பயன்படுத்தியது. அமெரிக்க அணியின் சிக்கனப் பந்துவீச்சு, இடதுகை சுழற்பந்து வீச்சாளர் கெஞ்சிகேவின் பந்து வீச்சு (4-0-19-1). ஓமன் அணியின் சிக்கனப் பந்துவீச்சு, இடதுகை சுழற்பந்து வீச்சாளர் ஷகில் அகமது வீசியது (4-0-26-0).
- ✓ ஓமன் அணித்தலைவர் ஜாடிந்தர் சிங் 20 பந்துகளில் 28 ரன்கள் அடித்தார். அமெரிக்க அணித்தலைவர் மோனக் பட்டேல் 22 பந்துகளில் 27 ரன்கள் எடுத்தார்.
- ✓ இந்தப் போட்டியில் ஓமன் அணியில் ஹஸ்னெயின் ஷா மற்றும் முஜிபுர் அலி அறிமுகம் ஆனார்கள். அமெரிக்க அணியில் சஞ்சய் கிருஷ்ணமூர்த்தி அறிமுகம் ஆனார்.
- ✓ 190 ரன்களை சேஸ் செய்த அமெரிக்க அணி, 19வது ஓவர் முடிவில் 3 விக்கெட் இழப்பிற்கு 194 ரன்களை எடுத்து 7 விக்கெட் வித்தியாசத்தில் வென்றது.

# சகோதரக் கிரிக்கெட்





**ஆன்டி பிளவர்** **கிராண்ட் பிளவர்**

| ஆன்டி பிளவர் | | கிராண்ட் பிளவர் |
|---|---|---|
| இடது கை பேட்ஸ்மேன் | **பேட்டிங்** | வலது கை பேட்ஸ்மேன் |
| விக்கெட் கீப்பர் | **பந்துவீச்சு** | இடது கை சுழற்பந்து |
| 276 | **போட்டிகள்** | 288 |
| 11580 | **ரன்கள்** | 10028 |
| 333* | **விக்கெட்டுகள்** | 129 |
| 15 | **ஆட்டநாயகன்** | 17 |
| டெஸ்ட் போட்டிகளில் ஒரு இன்னிங்ஸில் அதிக ரன்கள் அடித்த விக்கெட் கீப்பர் - 232* எதிர் இந்தியா | **சாதனை** | இரண்டு இன்னிங்ஸிலும் சதமடித்த முதல் ஜிம்பாப்வே வீரர் |
| சமூக சேவகர், பயிற்சியாளர் | **தற்போது** | பயிற்சியாளர் |
| ஜிம்பாப்வே அணி வெற்றி பெற்ற முதல் டெஸ்ட் போட்டியில் ஆட்டநாயகன் கிராண்ட் பிளவர் (201*) மற்றும் ஆன்டி பிளவர் (156). | | |

# வருணின் வளர்ச்சி

வருண் சக்ரவர்த்தி இந்திய டி20 அணியில் தற்போது தவிர்க்க முடியாத சுழற்பந்து வீச்சாளர். 33 வயதான வருண் இந்த உயரத்தை எப்படி எட்டினார்.

வருண் சக்ரவர்த்தி தமிழக வீரர் என்றாலும் சிஎஸ்கே அணிக்கு இதுவரை ஆடியதில்லை. கொல்கத்தா நைட்ரைடர்ஸ் அணியில் சிறப்பாக விளையாடியதால் 2021 இந்திய டி20 அணிக்குத் தேர்வானார். அதாவது கோரோனா பேட்ச்சில். இலங்கைக்கு எதிரான தொடரில் ஒரு விக்கெட் மட்டுமே வீழ்த்தினார்.




அதற்குப் பிறகு உலகக் கோப்பை அணியில் இடம் பிடித்தார். பாகிஸ்தான், நியூசிலாந்து மற்றும் ஸ்காட்லாந்து அணிகளுக்கு எதிரான போட்டிகளில் ஆடி விக்கெட் எதுவும் எடுக்கவில்லை. அணியில் இருந்து நீக்கப்பட்டார்.

2024ல் பங்களாதேஷ் அணிக்கு எதிரான தொடரில் மீண்டும் வாய்ப்பு கிடைத்தது. மூன்று போட்டிகள் கொண்ட அந்தத் தொடரில் 5 விக்கெட்டுகளை வீழ்த்தினார். தென்னாப்பிரிக்கா தொடருக்கான அணியில் வாய்ப்பு தானாய் வந்தது.

தென்னாப்பிரிக்கா தொடரில் விக்கெட் வேண்டுமென்றால் வருணைக் கூப்பிட வேண்டும் என்ற நிலையை ஏற்படுத்தினார். தென்னாப்பிரிக்கா தொடரில் நான்கு போட்டிகளில் 12 விக்கெட்டுகளை வீழ்த்தினார். அவர் 5 விக்கெட் எடுத்த போட்டியில் இந்தியா தோற்றது பரிதாபம்.

நடந்து முடிந்த இங்கிலாந்து தொடரில் 5 போட்டிகளில் 14 விக்கெட்டுகளை வீழ்த்தி தொடர் நாயகன் ஆகியுள்ளார் வருண் சக்ரவர்த்தி. தரவரிசையிலும் 5ம் இடத்தில் இருந்து 2ம் இடத்தை எட்டியுள்ளார்.

இதனால் ஒருநாள் போட்டி வாய்ப்பு வந்துள்ளது. இந்தக் கட்டுரை எழுதும் நேரத்தில் நியூசிலாந்துக்கு எதிரான போட்டியில் 5 விக்கெட்டுகளை எடுத்து இந்திய அணிக்கு வெற்றியைத் தேடித்தந்துள்ளார்.

வருண் சக்ரவர்த்தி மேலும் பல வெற்றிகளைக் குவிக்க துடுப்பாட்டம் குழு வாழ்த்துகிறது.

## 2 ரன்கள்

ரஞ்சிக் கோப்பை அரையிறுதிப் போட்டியில் குஜராத் - கேரளா அணிகள் மோதின. பிப்ரவரி 17-21 இந்தப் போட்டி அகமதாபாத்தில் நடைபெற்றது.

ரஞ்சிப் போட்டிகளைப் பொறுத்தவரை டிரா ஆகும் போட்டிகளில் முதல் இன்னிங்சில் எந்த அணி அதிக ரன்கள் அடித்ததோ அந்த அணி அடுத்த சுற்றுக்குத் தகுதி பெறும்.

கேரளா அணி முதலில் பேட்டிங் செய்து மூன்றாம் நாளில் துவக்கத்தில் 457 ரன்களுக்கு ஆல் அவுட் ஆனது. விக்கெட் கீப்பர் முகமது அசாருதீன் 177 ரன்கள் எடுத்து ஆட்டமிழக்காமல் இருந்தார். கேப்டன் சச்சின் பேபி 69 ரன்களும், சல்மான் நிசார் 52 ரன்களும் அடித்தனர்.

குஜராத் அணி நான்காம் நாள் முடிவில் 7 விக்கெட் இழப்பிற்கு 429 ரன்கள் எடுத்திருந்தது. ஐந்தாம் நாள் ஆட்டம் பரபரப்பாகத் துவங்கியது. குஜராத் அணியின் கடைநிலை வீரர்கள் ஓரளவு சிறப்பாக ஆடினர்.

கடைசி விக்கெட் பார்டன்ர்ஷிப்பாக பிரியஸித்சிங் ஜடேஜா மற்றும் அர்ஸன் நக்வாஸ்வல்லா ஆடிக்கொண்டு இருந்தனர். அணியின் ஸ்கோர் 455 என்ற நிலையில் நக்வாஸ்வல்லா அடித்த பந்து ஷார்ட் லெக் திசையில் நின்ற சல்மான் நிசார் ஹெல்மெல்டில் லோகோ பகுதியில் பட்டது. அங்கிருந்து எகிறிய பந்தை சிலிப்பில் நின்ற கேப்டன் பேபி பிடிக்க குஜராத் 455 ரன்களுக்கு ஆல் அவுட் ஆனது.

கேரளா அணி அப்போதே கொண்டாடத் துவங்கியது. அடிபட்ட வீரர் நிசாருக்கு மாற்று வீரராக ரோஜர் அறிவிக்கப்பட்டார். அந்த இரண்டு ரன்களே கேரளா அணியை 68 ஆண்டு கால ரஞ்சி வரலாற்றில் முதல் முறையாக இறுதிப் போட்டிக்கு அழைத்துச் சென்றது.



முகமது அசாருதீன் ஆட்டநாயகன் ஆனார்.

# திமுத் கருணரத்னே

- கா. ராமச்சந்திரன்

தனது நூறாவது சர்வதேச டெஸ்ட் போட்டியுடன் ஓய்வை அறிவித்துள்ளார் இலங்கை அணியின் தொடக்க ஆட்டக்காரர் திமுத் கருணரத்னே. பிப்ரவரி மாதம் காலியில் நடைபெற்ற ஆஸ்திரேலியாவிற்கு எதிரான போட்டியுடன் சர்வதேசப் போட்டிகளில் இருந்து ஓய்வு பெற்றுள்ளார் (2012 ல் இதே காலி மைதானத்தில் தான் நியூசிலாந்திற்கு எதிராக இவர் டெஸ்ட் போட்டிகளில் அறிமுகமானார் என்பது குறிப்பிடத்தக்கது).



டெஸ்ட் - 100 போட்டிகள் ஒரு நாள் - 50 போட்டிகள் என்று தனது சர்வதேசக் கிரிக்கெட் பயணத்தை நிறைவுபெற்றிருக்கிறார் கருணரத்னே. டெஸ்ட் கிரிக்கெட்டில் 100 போட்டிகள் விளையாடி ஒரு இரட்டை சதம், 16 சதங்கள் மற்றும் 39 அரை சதங்களுடன் 7222 ரன்களை குவித்துள்ளார். ஒரு நாள் போட்டிகளில் ஒரு சதம் மற்றும் 11 அரை சதங்களுடன் 1316 ரன்கள் எடுத்துளார்.

தில்ஷன் காயம் காரணமாக இலங்கை அணிக்குள் வந்து டெஸ்ட் போட்டிகளில் இலங்கையின் சிறந்த தொடக்க ஆட்டக்காரராகத் தன்னை நிலைநிறுத்திக்கொண்ட கருணரத்னே, இலங்கையின் தொடக்க ஆட்டக்காரர்களில் ஒரு இன்னிங்ஸ்ல் அதிகபட்ச ரன்களைக் குவித்தவர் (152) என்ற சாதனைக்கு சொந்தக்காரர். பங்களாதேஷ் அணிக்கு எதிராகத் தன் முதல் இரட்டை சதத்தை 2021 ல் பதிவு செய்தார் (244).

2019ல் இலங்கை அணித் தலைவராக நியமிக்கப்பட்ட கருணரத்னே தென்னாப்பிரிக்காவில் நடைபெற்ற தென்னாப்பிரிக்காவிற்கு எதிரான டெஸ்ட் தொடரை வென்றார். இந்த சாதனையை முதலில் படைத்த ஆசிய அணித்தலைவர் என்ற

பெருமையை கருணரத்னே பெற்றார். 2019 ஒரு நாள் உலகக்கோப்பைப் போட்டியையும் இவர் தலைமையில் இலங்கை சந்தித்தது. டெஸ்ட் போட்டிகள் அளவிற்கு ஒரு நாள் போட்டியில் இவரால் ஜொலிக்க முடியவில்லை. டெஸ்ட் போட்டிகளில் இரண்டாவது இன்னிங்ஸ்களில் தனது சிறப்பான ஆட்டத்தை வெளிப்படுத்தியதன் காரணமாக இலங்கை ரசிகர்களால் டெஸ்ட் போட்டியின் இரண்டாவது இன்னிங்ஸ்-ன் நாயகன் என்று பாராட்டப்பட்டார் கருணரத்னே.

அணித்தலைவராக இலங்கைக்கு 30 டெஸ்ட் போட்டிகளில் களம் கண்டு 12 வெற்றி 12 தோல்வி மற்றும் 6 போட்டிகள் சமன் பெற்றுள்ளார். ICC ன் டெஸ்ட் அணியில் மூன்று ஆண்டுகள் இடம்பெற்றுள்ளார்.

2019-ல் ஆஸ்திரேலியாவிற்கு எதிராக ஒரு போட்டியில் கம்மின்ஸ் பந்தில் பின் கழுத்தில் அடிபட்டதன் காரணமாக ஆட்டத்தின் பாதியில் மருத்துவமனை சென்று அடுத்த நாள் மீண்டும் களத்திற்கு வந்து அரை சதம் அடித்த நிகழ்வு கிரிக்கெட் ரசிகர்களால் பாராட்டப்பட்டது.

எப்போதாவது பந்து வீசும் கருணரத்னே சர்வதேசப்போட்டிகளில் வீழ்த்திய முதல் விக்கெட் இந்திய வீரரான புஜாரா.




இந்த மாதம் ஆஸ்திரேலியாவிற்கு எதிரான டெஸ்ட் போட்டியில் 35 & 14 ரன்களுடன் தனது சர்வதேசப் பயணத்தை முடித்துக்கொண்ட **"பிராங் திமுத் மதுசங்கர கருணரத்னே"** இலங்கை டெஸ்ட் கிரிக்கெட் வரலாற்றில் நீங்காத இடம் பிடித்துள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.




# கடைசிப் பக்கம்

சாம்பியன்ஸ் டிராபி இறுதிக்கட்டத்தை எட்டியுள்ளது. ரசிகர்கள் ஒருநாள் போட்டிகளை ரசித்துப் பார்த்து வருகின்றனர். பாகிஸ்தான் கிரிக்கெட் வாரியம் ஆடுகளங்களை கொஞ்சம் பந்துவீச்சாளர்களுக்கு உதவும் வகையில் தயார் செய்து இருக்கலாம். பாகிஸ்தான் அணியின் பலமே பந்து வீச்சு தான். அதே போல் மைதானத்தில் வடிகால் மற்றும் பராமரிப்பு வசதிகள் விசயத்தில் இந்திய, பாகிஸ்தான் கிரிக்கெட் வாரியங்கள் இலங்கையிடம் கற்றுக் கொள்ள நிறைய இருக்கிறன. கடந்த ஆசியக் கோப்பைப் போட்டியின் போது இலங்கையில் மைதானம் முழுக்க மூடி வைத்திருந்தனர். அதே போல் வடிகால் மற்றும் நீர் உறிஞ்சும் வசதியும் சிறப்பாக இருந்தது. இந்தியாவில் ஆப்கானிஸ்தான் - நியூசிலாந்து டெஸ்ட் போட்டி ஒரு நாள் கூட நடத்த முடியாமல் கைவிடப்பட்டது. பாகிஸ்தான் நிலைமையும் அது தான். வருங்காலங்களில் நிலைமை சரியாகும் என நம்புவோம்.

மகளிர் பிரிமியர் லீக் சிறப்பாக சென்று கொண்டிருக்கிறது. அடுத்த இதழில் அதைப்பற்றிய தொகுப்பு இடம் பெறும்.

மீண்டும் சந்திப்போம்.

தொடர்புக்கு +91 8056609320



